தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 219

# வீராகமம்





தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

## சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 219

# வீராகமம்

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் :
**டாக்டர். சி. கோ. தெய்வநாயகம்,எம்.ஏ.,எம்.பில்.,பி.எச்.டி**
சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்
**சரசுவதி மகால் நூலகம்,**
**தஞ்சாவூர்.**

2006 ] [ விலை : ரூ. 50-00

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : வீராகமம் |
| பதிப்பாசிரியர் | டாக்டர் சி.கோ. தெய்வநாயகம் |
| வெளியிடுபவர் | : இயக்குநர்,<br>சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 219 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : இரண்டாம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2006 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 21 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 84 |
| படிகள் | : 250 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சுக்கோப்பு மற்றும்<br>ஒளி அச்சு,<br>சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : ஆகமம் |
| விலை | : ரூ.50-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

உலகின் அறிவு நூல் களஞ்சிய மையங்களில் ஒன்றாகவும், ஒப்புயர்வற்றதாகவும் திகழுகின்ற சிறப்புடைய நிறுவனம் சரசுவதி மகால் நூலகம் ஆகும்.

பலமொழிகளைச் சார்ந்த ஏராளமான அரிய பனையோலைச் சுவடிகள், காகிதச்சுவடிகள், பல மொழித்துறைகள், அருங்காட்சியகம் முதலியவற்றைத் தன்னகத்தே கொண்டு, எண்ணற்ற ஆய்வாளர்களையும், வாசகர்களையும், சுற்றுலாப் பயணிகளையும் எட்டுத்திக்கிலிருந்தும் தன் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்து அறிவுச்செல்வத்தை அள்ளித்தருவது இந்நூலகம்.

இங்கு பாரதி கூறுமாப்போல் "செப்புமொழி பதினெட்டுடையாள் எனின்; சிந்தனை ஒன்றுடையாள்" என பன்மொழிச் சுவடிகள் பல்வேறு கருத்துக்களைக் காட்டும் வண்ணம் மிளிர்கின்றன. சமயம், தத்துவம், இலக்கியம், இலக்கணம், நாட்டியம், இசை, மருத்துவம், சோதிடம், மந்திரசாத்திரம், சிற்பக்கலை முதலிய பேருண்மை கூறும் சுவடிகள் உள்ளன.

தனிப்பட்டவர்கள் வாழ்க்கையிலும், மனித இனம் முழுமைக்குமாக பரந்து விரிந்த நிலைக்குச் சமயம் வளர்ந்து வாழ்வியல் நெறிகளைக் காட்டுகிறது. சமயத்தின் பெயரால் பல நன்மைகளும், ஒழுக்க உயர்வும் ஏற்பட்டுள்ளன.

திருநாவுக்கரசு சுவாமிகள்,

" **ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனம் இல்லை** " என்கிறார்.

கி. பி. 12-ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் வீரசைவ நெறி தோன்றி கி. பி. 16-ஆம் நூற்றாண்டுக்குப் பின்பு பெருவளர்ச்சி

பெற்றுள்ளது. சைவ மடங்கள் பல தோன்றின, சைவமும், குருவணக்கமும் ஒருங்கிணைந்த நெறியாக குருவே சிவனாக மதிக்கப்பட்டு மடங்கள் பல வளர்ந்தன. இலிங்க வழிபாடு மேலோங்கியது. சித்தாந்த, ஞான, யோக முறைகள் போற்றப்பட்டன.வீராகமம் போன்ற அறச் சமய நூல்கள் தோன்றின. **வீராகமம்** எனும் இந்நூல் நம் நூலகச் சுவடிகளின்றும் முனைவர் சி. கோ. தெய்வநாயகம் அவர்களால் 1985-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்டது. இப்பதிப்பாசிரியர் அரிதின் முயன்று இந்நூலில் கூறப்படும் கருத்துக்கள இனிய எளிய தமிழில் தந்துள்ளார். இந்நூலில் மெய்ம்மைநெறி, குருலிங்கபக்தி ஆகியவை வலியுறுத்தப்படுகிறது.

இப்பொழுது இந்நூல் இரண்டாம் பதிப்பாக வெளிவருகின்றது. இந்நூல் சைவப்பெருவுலகில் சிறந்த வரவேற்பை தொடர்ந்துபெறும் என்பதில் ஐயமில்லை.

இந்நூல் வெளியீட்டுக்குத் தேவையான நிதியுதவியை நல்கியுள்ள நடுவண் அரசுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இந்நூல் நன்முறையில் வெளிவர ஆவனசெய்துள்ள சரசுவதி மகால் நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் பொறுப்பு வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும், இந்நூலை நன்முறையில் அச்சிட்ட கணினி பிரிவினருக்கும், நூல் வெளிவரத் துணைநின்ற ஏனையோருக்கும் என் இனிய பாராட்டுக்கள்.

**சா. விஜயராஜ் குமார்,** இ. ஆ. ப.,
*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்*
*இயக்குநர்,*
**சரசுவதி மகால் நூலகம்.**

தஞ்சாவூர்,
7-9-2006.

# முன்னுரை

திருவருட் பயனெறி கூறும் அறநூல்கள் விழுமிய முழுமையினவாய் தமிழகத்திலேயே தோற்றம் பெற்றுள்ளன. அவ்வறநூற்கள் பல, பல சமயங்களை அல்லது கொள்கைகளைச் சார்ந்தோராலேயே படைக்கப்பட்டுள்ளன. தாம் தழுவிய சமயம் அல்லது கொள்கைகட்கேற்பவே அந்நூலோர்கள் தம் நூலை, தமது கருத்துக்களை மனித சமூகத்திற்குப் படைத்து அருளியுள்ளனர். அமைப்பு என்பது அந்நூல்கட்கு சமயம், அல்லது மதம், அல்லது கொள்கை என்ற பலவண்ணத்ததாயினும், நோக்கம் என்னவோ ஒன்றுதான் அது "மானுட உய்தி".

மனிதன் ஆகூழினாலோ, ஆண்டவன் அருளினாலோ தோன்றிவிடுகிறான். உலகில் வாழத்தலைப்படுகின்றான். நன்மை, தீமை எனவமைந்த பொருட்சார்பு, செயற்சார்பு, வினைச்சார்பு இவற்றால் இன்ப, துன்பமுற்று அலமறுகிறான். படைப்பின் நோக்கம் அதுவா? அவ்வாறாயின் அவனும் விலங்கும் ஒன்றா ? உயிரினைப் படைப்புகளுள் மனிதன் உயர்ந்தவன். இதனை உறுதியாக்க வேண்டும். அதற்கு வழி ? சிந்தனை, விளைவு ? சமூக நலத்தோன்றல்கள். அவர்களால் மனிதகுலச் சிறப்புக் கருத்துக்களுடன் சமயங்களும் வளர்ந்தன.

அத்தகைய சமயங்கள் கால வளர்ச்சியின் பல நிலைகளில் பல்வேறுவிதமான வளர்சிந்தனைப் படியாகப் புதுப்புதுக் கருத்துக்களை வழங்கின. எல்லாம் மக்கள் நலமே கருத்தில்கொண்டு படைக்கப்பட்டுள்ளன.

அத்தகைய சமயங்களுள் மனிதனின் உயிர் என்ற நுண்மை குறித்து மேன்மேலாய்வு செய்து கண்டு மனித உயிரின் மேம்பாட்டினை இறைமையோடு சார்புறுத்திப் பார்த்து எடுத்துரைத்து, நல்வழிப்படுத்திய பன்னூல்களைச் சைவசமயமே படைத்துளது. அச்சைவமும் நாளடைவில் பல்வேறான கிளை வளர்ச்சிகளைப் பெற்று ஒவ்வொரு கிளையும் இத்தகு படைப்புப் பழங்களைப் படைத்து வழங்கியள்ளன.

இக்கிளைப் படைப்புப் பழங்களுள் ஒன்றாகவே **வீராகமம்** தோன்றியுள்ளது. சைவத்துள் கிளைத்த காபாலிகம், பாசுபதம், காளாமுகம் முதலிய நெறிகளைத் தொடர்ந்து கி.பி.12ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர், **வீரசைவநெறி** தோன்றி கி.பி.16ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர் பெருவளர்ச்சி பெற்றுள்ளது. இக்கால அளவிலேயே தமிழகத்தில் சைவ மடங்கள் தோன்றி வளர ஆரம்பித்துள்ளன. சைவமும், குருவணக்கமும் ஒருங்கிணைந்த நெறியாக குருவே சிவனாக மதிக்கப்பட்டு மடங்கள் வளர்ந்த காலமல்லவா? அந்நெறி தழுவி எழுந்த அறநூல்களும் இக்கருத்தினையே வற்புறுத்தி எழுந்தன. மாதா, பிதா, குருவென அமைந்த தொடரின் குரு சிறப்பின் மிகுதியால் நிறைவு நிலையினராகக் கருதப்பட்டார். இலிங்க வழிபாடு அகமும் புறமும் வற்புறுத்தப்பெற்று வளர்ச்சிபெற்றது. இப்புறக் காரணிகளொடு பழைய சித்தாந்த, ஞான, யோக முறைகளும் ஏற்கப்பட்டு ஒரு கலவையாக வெளியாகிய தோற்றமே “வீராகமம்” போன்ற அறச்சமய நூல்கள். சமயஞ்சார்ந்தவையாயினும் அவைகள் மனித உயிர்க்கு உறுதுணை விளக்குவனவாகவே எழுந்துள்ளன.

“வீராகமம்” இவ்வண்ணம் அமைந்த நூல்களுள் தனிப்பெருந்தகுதியுடன் திகழ்கிறது. அகப்புறச் சமயங்களி

லெல்லாம் தலையாய கொள்கைகளை தெளிவுற, எளிதாக எடுத்தியம்புகிறது. நூற்றிப் பத்துப்பாடல்களைக் கொண்ட இந்நூல் தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தின் தமிழ் ஏட்டுச் சுவடிகளின்படி இந்நூலுருவாக்கம் பெறுகின்றது.

தீண்டாமையொழித்து பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் எனப்பேசினும், வீரசைவ நெறி பயில வருணத்தார்க்கேற்பக் காலம் உரைக்கும் முரண்பாடு இந்நூலுள் இருக்கத்தான் செய்கிறது. ஆயின் என்ன? நூல் எழுந்த காலத்துப் புரட்சியின் விளைவு அவ்வளவுதான். அவ்வளவே மிகுதி.

மெய்ம்மை நெறி,குருலிங்கபத்தி இவற்றை வலியுறுத்துவதோடு இந்நூல் அதற்கான தனிச்சிறப்புக்களை விளக்கமும் செய்கிறது. நல்ல கருத்துக்களை நல்ல தமிழில் நல்ல புலமையுடன் இச்செய்யுட்கள் எடுத்தோதினும் ஏடு பெயர்த்தெழுதுவார் மயக்கத்தால் யாப்புப் பிழை, தொடர்ப் பிழை, எழுத்துப்பிழை, சொற்பிழை இவைகளும் இவற்றுள் இருக்கவே செய்கின்றன. ஆனால் அப்பிழைகளை அப்படியே ஏடெழுதினார். பிழை என்றற்கில்லை. அக்கால நிலையில் விளங்கிய புலமையில் அளவறிந்து ஓர்தல் முடிவு காணற்கு நன்று.

தமிழரின் அரும்பெரும் அறிவுச் செல்வங்களை மீட்டுருவாக்கம் செய்து, புது வடிவம் கொடுத்து தமிழர்க்குச் சேர்க்கும் பணியில் தஞ்சை சரபோசி மன்னர் சரசுவதி மகால் நூலகம் அரும்பெரும் பணியினைத் தொடர்ந்தாற்றி வருகின்றது. அதன் இயக்குநராக பொறுப்பாற்றி வரும் தஞ்சை மாவட்ட ஆட்சியர், திருமிகு T. R. ராமசாமி, இ.ஆ.ப., அவர்களது மேலாண்மையில், நூலக நிருவாக அதிகாரி திருவாளர் அ. பஞ்சநாதன்,எம்.ஏ.,பி.லிப்சி., அவர்கள் மிக்க

அவர்கள் மிக்க ஆர்வத்துடன் செயலாற்றி எம்மனோரையும் இப்பணியுள் ஊக்கி வருவது தமிழகத்தாரால் போற்றப்பட வேண்டிய அருஞ்செயலாகும், அவர்கட்கு எந்நன்றி.

அறிவுலக ஐயங்களையும், அருமருந்தெனக்களையும் இந்நூலகத்திற்கும், நூலகத்தார்க்கும் என்றும் நன்றி யுடையேன்.

நூலுள் காணப்படும் பிழைகளைத் தெரிவித்தருளின் கடப்பாடுடையேன்.

அன்பின்,

**சி. கோ. தெய்வநாயகம்**

*2 - 5 - 85.*



# வீராகமம்

## கடவுள் வாழ்த்து

**அரிய சஞ்சித மகலவும்**
**புரியு டம்பிட ரொழியவும்**
**விரியு நம்பவ மிரியவுங்**
**கரிமுகன் கழல் கருதுவாம்.**

(என்றது.) கடவுள் வணக்கம் நுதலிற்று..

*(இதன் பொருள்.)* அரிய சஞ்சித வினைகள் அகலவும், உடல் விளைத்திடும் இடர் ஒழியவும் விரிந்து பல்கும் நம் பாவங்கள் அஞ்சி ஓடி மறையவும், யானை முகனாரது கழல் கருதுவாம் என்பதாம்.

கடவுள் வாழ்த்துரைத்தார் இந்நூல் நின்று நிலவுதல் வேண்டி, மன மயக்க, மாய மலங்களகற்றும் வீர சைவ நூலை விளங்கச் சொல்லுவான். விக்கினேசுவரனார் கழலினைக் காப்புக் கருதுகிறார்.

### வாழ்த்து

சோதி குருபரன் சரணந்
தொழுது சிரமிசை யிருத்தி
நீதி தருங்குரு லிங்க
சங்கமத்தி னிலைமை யெல்லா(ம்)
நாத னுமைக்குரைத்த தனை
நயந்துல கெண்ணல் லிமைய
ரோதிய நற்கரு நடத்தின்
பயன்றமி ழாலுரைத் திடுவோம். (1)

(எ-ன்.) கடவுள் வாழ்த்துரைத்தது.

*(இ-ள்.)* அங்கிங்கெனாதபடி எங்கும் ஒளிமயமாயும் அனைவர்க்கும் அறிவுறுத்தும் குருவாகவும் விளங்குகின்ற இறைவனின் தாள்பணிந்து, தலைமிசை ஏற்று, நல்ல அறங்களைப் புகலும் இறைமையும் உயிர்களும் ஒன்றிக் கலந்து மேன்மையுறுஞ் செவ்வழி பகரும் இந்நூலை, முன்னாளில் சிவனார் உமைக்குக் கூறியவாறே ஆயின் உலகமுய்தற் பொருட்டு கருநாடக மொழிகளுள் ஒன்றாய இன்றமிழ் மொழியால் கூறலுற்றேன் என்பதாம்.

சோதி-அறிவால் ஒளிர்பவன், ஒளிர்ப்பிப்பவன், ஆதலின் "அருட்பெருஞ்சோதி" என்றார் வள்ளலார்.

சிரமிசை இருத்துதலாவது புந்தியுள் தரித்தல், இதனை "அகம் பிரம்மாச்மி" என்பர் வேதாந்த நூலார்.

குருலிங்க சங்கமம் என்பானான் அத்துவித தத்துவத்தை விளக்கலானார். அத்துவிதமாவது இரண்டறக்கலத்தல், கருநாடக மொழி எனத்திராவிட மொழிகளைக் குறித்தார். கால வழக்கினான், இச்செல்லாண்மை ஆசிரியர் தம் காலத்தினை 18-ஆம் நூற்றாண்டிற்குரியதாக்குதல் கண்கூடு.

**அவையடக்கம்**

*சீரிசைத்த வீரசைவத்*
*திறமதனை யல்லமயா*
*கிரோரிசைத்த தவமுனிவற்*
*கினிமையுட னுரைத்ததையான்*
*பாரிசைத்த புன்மொழியாற்*
*பகர்வதுல கேழுமொரு*
*கீரைவித்தினில் லடக்க நினைந்*
*திடு மிடர்கிறி நெறியே.* (2)

(எ-ன்.) அவையடக்க முணர்த்திற்று.

*(இ-ள்.)* தனிப்பெருஞ்சீர்த்தி வாய்ந்த வீரசைவ நெறியின் தனிப்பெரும் சிறப்புக்களை சிவனார் அம்மைக்கு அருளிக்கூறியவாறே, இனிமையுற தவமுனிவற்கு உரைக்கப் பட்டவாறே பாரில் இகழப்பட்ட எனது புல்லறிவினாற் கூறலுற்ற எனதவா ஏழுலகங்களையும் ஒருகீரை வித்திலடக்கிட நினைத்திடும் துன்பம் பயக்கும் முயற்சியே என்பதாம்.

இதனானவையடக்கங் கூறினார்.

நிலவுல காயதன் முதலாய்
நீடு வயிரவ மீறா
மலகில் பலசமயமு மகற்றி
யாவு முதித்தொடுங் கிடமா
முலகு புகழ் வீரசைவ
சித்தாந் தத்துண் மையினை
யலையு மனத்தறி விலியென்
அறிந்த படிமொழிந் திடுவேம். *(3)*

(எ-ன்.) இதுவுமது.

(எ-ன்.) உரைபொருள் உணர்த்திற்றாம்.

*(இ-ள்.)* உலகில் வழங்கி வருகின்ற உலகாயதம் முதல் பைரவம் ஈறாயுள்ள வரம்பற்ற பல சமயங்களும் தோற்றமும் ஒடுக்கமுங் கொண்டிருத்தற்குரியதாகப் பெருமை பெற்றொளிரும் வீரசைவத்தின் சித்தாந்த உண்மைகளை ஒன்றிற்பற்றின்றி ஒருமுகப்படா அலையும் மனத்தறிவிலி யாகிய யான் எவ்வாறு அறிந்தேனோ அவ்வாறே மொழிந்தனன் என்றவாறு.

## சைவ வகைமை

### ஆதிசைவர்

தெரிவரும் பவிய தாகிச்
சிவலிங் காற்சனை யில்லாமல்

குருவருள் மந்தி ரத்தைக்
குறித்தவ னிருபா தத்தைப்
புரைவிலா மனத்தி னாலே
பூசைசெய் துலகவாழ்க்கை
யருவராதமர்ந்து வாழ்வோன்
வனப்புரு வசைவ னாவான். (4)

(எ-ன்.) சைவனாவன் யார்? என்பதுணர்த்திற்று.

(இ-ள்.) சிவலிங்காற்சனை போலும் புறப்பூசனை களைக்களைந்து, குருவருள் நினைத்து மந்திரம் புனைந்து, திருவடிகளை மனத்துள் வனைந்து அனைத்தறனாய மனத்தான் பூசை செய்து உலக வாழ்வியல் நெறிப்படியே அறனெனப்பட்ட இல்வாழ்வு வாழ்வோருள் ஒருவனாக வாழ்ந்து வருவான் எவனோ, அவனே சீலமிக்க ஆதி சைவனாவான் என்பதாம்.

"வனப்புருவ சைவனாவான்" என்றலே முறை. புருவம் பூர்வமென்பதன் மரூஉ. பூர்வம் ஆதியாம்.

**சுத்த சைவர்**

தெளிய மும்முதலு மொன்றாய்
சிந்தித்து தித்துக் குரவோனுங்
களிதரு மந்தி ரத்தாற்
கருத்துற பீட மீதே
யளிதரு வானைப் பூசித்
தடியரைக் காணிற் கண்கள்
துளிகொள வணங்கி வாழ்வோன்
சுத்தமாஞ் சைவ னாவான். (5)

(எ-ன்.) மூலப்பொருள் உணர்ந்த சைவ நிலையுணர்த்திற்று.

(இ-ள்.) மனந்தெளிவு பெற முதல், நடு, கடை எனவும், படைப்பு, காப்பு, மறைவு எனவும் பிரமன், திருமால், சிவன்

எனவும் வழக்கு வன்மையுற்ற முப்பெருங் கடவுள் நிலையாம் பேதசித்தம் மாறி அபேதமாய், அப்பாலுக்கப் பாலாய், முதலிடை கடை மூன்றுமாய், ஆதியந்தமற்ற அநாதியாய், ஒளிமயமாய், அருள்வடிவாய் விளங்கும் முதல்வனைச் சிந்துத்து, கந்தழியாம் பெருமானை மகிழ்வு தரும் மந்திரத்தாற் மணமேடையிலே அருச்சித்து, சிவனடியாரைக் காணும்போதெல்லாம் நெஞ்சமினித்து கண்களால் வெளிப்பட வரவேற்று, வணங்கி மகிழ்ந்து, தொண்டியற்றி வாழ்வானே செம்மையான சுத்த சைவனாவன் என்பதாம்.

**மார்க்க சைவர்**

பேசு மிவ்விரு சைவத்தும்
பெருமை யாங்குரு னேசத்தின்
னாசை யாலங் கலிங்கி
யாகி யேகா பீடத்திற்
பூசை செய்துல காசாரம்
பொருந்தி நற்பா தந்தீர்த்து
மாசறக் கொள்வோன் றானே
மார்க்கசை வத்த னாவான். (6)

(எ-ன்.) மார்க்க சைவத்தனியல்பு கூறிற்றாம்.

சைவன், சுத்தசைவன், எனப்பேசப்பெறும் இவ்விரு வகைப்பட்டாரினும் மேன்மை மிக்க குருவருள் சிந்தனை மிகப்பெற, "லிங்கி" யாகி மனமேடையில் மூர்த்தியை (இலிங்கத்தை) இருத்தி பூசைசெய்து, உலக ஆசார அனுட்டானங்களைப் பின்பற்றி, துன்பொழிந்தவனே மாசற்ற கொள்கையுரவோன். அவனே மார்க்க சைவத்தின் தோன்றலுமாவான் என்பதாம்.

இலிங்கி இலிங்காயத்தாக வழங்கி வருகிறது.

**வீரசைவம்**

பூருவ சைவ மென்றும்
புகழ்சுத்த சைவ மென்றும்
.... ... ... ... ... ... ... ... ...
.... .... .... .... .... .... ...
நேருமிச் சைவ மூன்றும்
நெறிபெற வணங்கி வாழும்
வீர சைவத் தினிது
விளங்கவே விரித்துச் சொல்வோம். (7)

(எ-ன்.) வீர சைவத்தின் விளக்கம் புகன்றதாம்.

(இ-ள்.) பூர்வம், சுத்தம், மார்க்கமென மூவகைப்பட்டு விளங்கும், இம்மூன்று சைவரும் முறையுற வணங்கி வாழும் பெற்றிமை மிக்க வீர சைவத்தின் தனிப்பெரும் பண்புகளை விளக்கமுற விரித்துரைப்பாம் என்பதாம்.

இதனான் சைவத்துள் சிறந்த சைவமுணர்த்தப் பெற்றாம்.

**வீர சைவ விளக்கம்**

அத்தனா ரலகில் சோதி
யையர்மெய்ச் செல்வன் றானும்
நித்தமாங் கருணை யாலே
நிகழ் சிவ போகமான
வித்திலாப் பயி(ர்கள் தம்மை)
விளைத்திடப் பத்தி யென்னும்
மெத்துமா மழை பொழிந்து
வளர்ப்பதும் வீர சைவம். (8)

(எ-ன்.) இதுவுமது.

(இ-ள்.) உலகின் உண்மைக்கு உண்மையாயும் தந்தையாயும், சோதியாயும் இலங்குஞ் சிவனார்தம் இடையறவு படாக் கருணையாலே வித்திலாப் பயிர்களென

சிவபோகம் விளைந்திட, பத்தி எனும் மழை பொழிந்து வளர்ப்பதே வீர சைவமாகும்.

வித்தின்றியும் இவ்வீரசைவப் பயிர் முளைக்கும். அதனை வளர்ப்பதோ பக்தி மழை. ஆயினும் இவற்றிற்கான மூலகாரணம் சிவனார் கருணையே என முதன்மை சுட்டலே இப்பாடல் நோக்கம்.

**பயன்**

விரிவுறு மெழு பேதவினை
வழிதரயோனி தோறும்
திரிதக பவ மகற்றிச்
செறிந்திடு முயிர்கட் கெல்லாம்
பெருகிய சித்தி முத்தி
பிரசன்ன ராகவேண்டு
மரியநல் வரங்க ளெல்லா
மளிப்பதும் வீர சைவம். (9)

(எ-ன்.) வீர சைவத்தின் விளைவு சுட்டிற்று.

*(இ-ள்.)* உலகின்கண் மேன்மேல் விரிவுறும் எழுவகைப் பட்ட வினைகளின் வன்மையால் வாழ்நாள் வழியாம் யோனிகள் வழியே பிறவிப்பெருங்கடலினைச் சார்ந்து மும்மலமாம் ஆணவம், கன்மம், மாயைகளினன்றும் தெளிந்து விலகி இறையருளை நினைந்து நிறைவுறும் உயிர்கட் கெல்லாம் எதிர்தலோடும் நல்வரங்கள் பலவும் நல்கியருளுதலும் வீர சைவமே என்பதாம்.

உயிர்கள் என்றார் உணர்வு கருதி.

**வினை நீக்கம்**

வஞ்சகப் புலன்க ளாரு
மதமலி வேழந் தன்னை
யஞ்சவே மிதித்துத் தூறி
யடற்பது மன்பற் கென்று

முஞ்சிய பல்வித் தான
மும்மலச் சேறு நீக்கி
விஞ்சிய பரம ஞான
வெள்ளமும் வீரசைவம். (10)

(எ-ன்.) வீர சைவத்தின் வினைகளைக் குறித்தது.

*(இ-ள்.)* மனிதனை மாயப்படுத்தி வதைக்கும் வஞ்சகப் புலன்களாய மெய், வாய், கண், மூக்கு, செவியாகும் அடக்குதற்கரிய மதமலி களிற்றானைகளைத் துணிவுடன் ஒடுக்கியழிந்து வெற்றி தருவதும், வீரசைவச் சீலர்களின் வாழ்வில் அமைந்திருத்தலோடு மும்மலங்களின் பல்வகைத் தான தோற்றச் சேறுகளால் உற்ற மாசுகளை மிகுந்த ஞானமயமான ஒளி வெள்ளமாய் விளங்கும் வீரசைவமே கழுவி விளக்கமுறச் செய்வதாம்.

மிதித்தென்பது அக்கால வழக்கில் மெதித்தெனவே ஆளப்பட்டுளது.

**வீரசைவ விம்மிதம்**

**அகச்சமய முதல்**

பகர்தரு சைவம் பாசுபத
மகாவிரதங்களாகும்
முகமிகு வாமம் நீடு
வயிரவ முதலா யுள்ள
வகமலிச்சமயத் தோர்கட்
கவரவர் நிலைமைக் கேற்ற
தகைமிகு முத்தி யின்பந்
தருவது வீரசைவம். (11)

*(எ-ன்.)* அகச்சமயங்கட்கு மருளுவது வீரசைவமே என்றது.

(இ-ள்.) சைவசமயத்தில் அகச்சமயங்களாகிய பாசுபதம், மகாவிரதம், வாம், வயிரவம் முதலாய நெறிகளுக்குள்ளார்க்கும் அவர்வர் சால்பிற்கேற்ப உயரிய முத்தியின்பத்தினைப் பயப்பது வீரசைவமேயாகும்.

பகர்தரு சைவம் - விளக்கத்திற்கரிய சைவம்.

முகமிகு வாமம் - சக்திவழிபாட்டின் தனித்திறம் மிகுந்த வாமம்.

நீடு வயிரவம் - கிளைத்து நீளும் வயிரவம்.

**புறச்சமய மூலம்**

பரவுலகாய தூதி பாஞ் சராத்
தரியீ றா கத்
தரமிகு சமயத் தோர்கள்
திருக் குனை யடைவே நீக்கி
தரமிகு சைவத் தார்க்கு
சரிசை நான் கேட்கப் பண்ணி
விரவிய பரம ஞானந்
தருவதும் வீர சைவம். (12)

(எ-ள்.) உலகயதம் முதலா பாஞ்சராத்திரம் வரையிலான புறச்சமயத்தார்க்கும் அருள்வது வீரசைவமே என்றதாம்.

(இ-ள்.) உலகாயதம் முதலாக பாஞ்சராத்திரிகள் ஈறாகவுள்ள புறச்சமயத்தாரின் மனமாயைகளையகற்றித் தூய்மைப்படுத்தி அவர்களையும் மேன்மைமிகு சைவசமயத்தார்களாக மாற்றிப் பரிசு புரியும் மிக்க ஞானம் வாய்ந்தது வீரசைவமேயாகும்.

பரசமயம் - புறச்சமயம்.

பாஞ்சராத்திரி - செய்யுட்கேற்ப பாஞ்சாத்திரியாயிற்று.

## தடுத்தாட்கொள்ளல்

முந்திய மூலத் தாகு
முக்குண மயக்கி னாலே
சிந்தை கொள் காமமாதி
விடைய மாஞ்சீர் மைக்கேடு
மைந்தரைத் தடுத்து நீங்கா
மலமாயைக் கன்மமென்னும்
பந்தம தகற்றி ஞானம்
பணிப்பது வீர சைவம். *(13)*

(எ-ன்.) தடுத்தாட்கொள்ளும் தகுதி கூறிற்றாம்.

*(இ-ள்.)* இராக்கதம், தாமசம் முதலாய முக்குண மயக்கினாலே சிந்தை தடுமாறி காமம், குரோதம், உலோபம் முதலாய பொருட்களைப்பற்றி தாழ்மையுறும் மாக்களைத் தடுத்து, செம்பிலே களிம்பென்ன என்றும் நீங்காத் தன்மை வாய்ந்த ஆணவம், கன்மம் முதலாய மலங்களினாய பந்தமுமகற்றி நற்காட்சியில் அவர்தமைப் பணிப்பது வீரசைவமேயாகும்.

முக்குணத்தின் முதன்மையும் அருமையும் விளக்கமுற முந்திய என்றும், மூலத்தாகும் என்றும் உரைக்கப்பட்டது.

சீர்மைக்கேடு செய்யுள் நோக்கி.

சீமைக்கேடாயிற்று.

செம்பிற்களிம்பென்ன, மானுடத்தின் மலங்களைச் சுட்டினார். களிம்புநீங்கிட பொன்னுடன் செம்பினைக் கலத்தல்போல மனமாயை நீங்கிட ஒளிமயனான இறைவனுடன், அவனருளாலே அத்துவிதமாகும் முறை சுட்டவே இதன் கருத்து.

## மாண்பு

ஒரு மல வருக்குள் நின்று
முருவு கொண்டெதிரே நின்றிங்
குரு மல வருக்கு மூன்றுமல
வருக மேகம் போலவந்து
திரிமல விருளை நீக்கிச்
செறியுமா ருயிர் கட்கெல்லா
மரியலா னந்த முத்தி
யளிப்பதும் வீர சைவம். (14)

(எ-ன்.) மனவிருள் நீக்கும் மாண்பு புகன்றது.

(இ-ள்.) ஐம்புல வேடரினயர்ந்த மகற்குமுன் குருவடிவில் எதிரே தோன்றியும், நின்றும், மும்மலம் பயந்திடும் மனவிருளை நீக்குந்தன்மையுடைய ஒளிக்கீற்றாம் மின்னலெனவும் விளங்கி அருள்தலோடு ஆருயிர்கட் கெல்லாம் அன்பு செய்து ஆனந்த முத்திப் பேற்றினை அளிப்பதும் வீரசைவமேயாகும்.

மின்னல் மேகமென வந்தது-மேகத்தால் வருவது.

திரிமலம் மும்மலம்.சுழன்று சுழன்று வருவதெனினும் ஒக்கும்.

## இலிங்க நிட்டை

புன்னெறிச் சமயத் தோர்கள்
புகன்றிடு மவமொழிக்குத்
தன்னிரு செவிகோ டாயிற்
றடுற்றருள் னேயத் தாலே
மன்னிய லிங்க னிட்டை
புரிந்திடு மகிமை நல்கிக்
கொன்னமா பரமா னந்தங்
கொடுப்பதும் வீர சைவம். ((15)

(எ-ன்.) இலிங்க நிட்டையின் இயல்பு கூறிற்றாம்.

*(இ-ள்.)* புன்மை மிக்க புறசமயத்தார் காழ்ப்பின் கையகத்தால் சைவங்குறித்துப் பொல்லாப் புன்மொழி களைப்புகல, தன்னிரு செவிகளிற் கேளாவண்ணம், நேயவுணர்வால் தடுத்தருள் புரிவது நிலைபெற்ற இலிங்க நிட்டையாகும். அம்மாட்சியுடன் உணர்தற்கரிய பேரானந்தத்தினைக் கொடுத்துச்சிறப்பது வீரசைவமேயாகும்.

இலிங்க நிட்டை - மோனம்.

அன்னிய சைவர் தன்பால்
தீக்கைகொண் டயன்மா லாதி
மன்னிய சகலத் தோரை
வணங்குவோர் மதம்பு காம
லுன்னிரு மேக லிங்க
நிட்டை யினுறுதி காட்டி
தன்னிக ரில்லாத வின்பந்
தருவதும் வீர சைவம். *(16)*

(எ-ன்.) இதுவுமது.

*(இ-ள்.)* வீர சைவத்தின் வேறாய அகச்சமயத்தாரிடம் தீக்கை கொண்டு பிரமன்-திருமால் முதலாய பரசமயத் தெய்வங்களையும், சகலத்தாரையும் வணங்குவோர் மதம் புகாமல் உறுதி பயப்பது உள்ளத்துள் கொள்ளும் இலிங்க நிட்டையாகும். சீலம் பயப்பதும் தன்னிகரில்லா இன்பந் தருவதும் வீர சைவமேயாகும்.

அயன் மாலாதி மன்னிய சகலத்தோரை வணங்கும் நிலையாவது மெல்ல மெல்லவே புகும் கள்ளமாகும்.

மேதகு ஞானத் தீயாற்
றகனஞ்செய் மேனி தன்னை
பூதவா ரழலின் போக்கும்
புன்னெறிச் சமயத் தோர்ந்

தீதுறு நெறியை நீக்கித்
திகழ்ச்சிவ லிங்கநிட்டை
யாதா வதனா லன்பர்க்
களிப்பதும் வீர சைவம்.

(எ-ன்.) இதுவுமது.

(இ-ள்.) மேன்மை மிகு சிவஞானத்தீயால் உடற்குற்ற மாசுகளைத் தகனஞ்செய்தொழிக்க வேண்டிய தொழித்து புறச்சமயமாம் புன்னெறிகளைப் பற்றி மனந்தடுமாறி ஐம்பெரும் பூதங்களுளொன்றாய் தீயினழிலில் வெந்து சாம்பராக்கும் புறச்சமயத்தார்க்கும் அவர்தம் அறியாமையினை ஓர்ந்து அருளி, அப்புன்மையினை, அவரிடமிருந்து நீக்கி கருணையால் அவர்க்கும் பேறளிப்பது இலிங்க நிட்டையாம். அதுவே வீரசைவமாம்.

ஞானத் தீயாற் கழுவல் வீரசைவம்

பூதத் தீயாற் பொசுக்குவது புறச்சமயம் எனினும்,

புறச்சமயிகளையும் புனிதமாக்குவதே வீரசைவம் என்பதே பொருள்.

**சாதி பேதமற்றது**

தங்குல மகிமை நோக்கிச்
சங்கர னடியாற் கென்று
மங்கிய சாதி பேத
முரைத்தவர் மனையிற் போன
மிங்கெமக் காகா வென்னும்
மீனருக் கூமன் கண்ணில்
வெங்கதிர் நிலைமை போல
நிற்பதும் வீர சைவம்.

(எ-ன்.) சாதிபேதமற்றது வீரசைவம் என்றது.

(இ-ள்.) தம் பிறப்பமைந்த குலப்பெருமையினை மனங்கொண்டு சிவானந்தம் மெய்யடிமை கட்கும் சிறப்பில்லா சாதி பேதத்தினைக் கற்பிப்பவர், சாதியாற் தாழ்ந்தவர் வீட்டிற்செல்லலாகா என்பவராய் ஈனர்கட்கு வீரசைவம் ஊமன் கண்ணில் ஞாயிறு பட்டாங்கு விளக்கமின்றியே நிற்பதாகும்.

வீரசைவம் தீண்டாமையினை வெறுத்தொதுக்கவ தாகும். இதனை "ஊமன் கண்ணில் வெங்கதிர் நிலைமை போல" என்ற உவமையாற் விளக்கலானார்.

இதனான்,

தங்குலப் பாராட்டலும்

பிறப்பில் உயர்வு தாழ்வு காண்பதும்,

புறச்செயலுள் தீண்டாமை பேணுவதும்

வீர சைவத்தார்க்கு வேண்டாதாகும் என்பதுணர்த்தினார்.

மூன்றுங் கொண்டார்க்குற்ற வீரசைவம் பயனின்று ஊமன் கண்ணில் ஞாயிறனைய விளக்கமில்லா தொழியும் எனவுமுறுதி கூறினார்.

ஆதலின், "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்" என்பதே வீரசைவத்தின் மெய்ம்மை எனலாகும்.

## மெய்நெறி

அட்டமி யேகா தசி
யலாமதி வார மாதி
யொட்டிய விர தஞ்சில
முடலொறுத் திடு முபாதி
நிட்டையாம் பசுஞா னத்தின்
னிலை பெறு நெறிகள் யாவும்
விட்டிட வுண்மை ஞானம்
அளிப்பதும் வீர சைவம். (19)

(எ-ன்.) மெய்நெறியுணர்த்தலாயிற்று.

*(இ-ள்.)* அட்டமி, ஏகாதசி, உவா, அமாவாசை, வாரம் முதலாய நாள் விரதங்களால் உடலொடுக்கிடும், நலித்திடும் நெறிகளை, யோக நிட்டை முதலாய பசு ஞானத்தின் நிலைபெறு நெறிகள் பலவற்றை விட்டு நீங்கவும் உண்மை ஞானத்தை அளிப்பதும் வீரசைவமேயாகும். இதனான், விரதம், தவம் முதலாய புறக்கிரியைகளின் சிறப்பின்மை கூறினார்.

புறச்செயல்களாலாய பயனென் கொல்? என்பதனை "உடலொறுத்திடும் உபாதி" எனக் குறிப்பிட்டார்.

அவையற்ற நிலையில் இது உற்றிடும் இயல்பு கூறப்பட்டது.

**வீரசைவம் பெறா வீணர்**

மாசுறு முலக மாயைச்
சுழிப்பட்டு மரித்தோர் தம்மை
யாசையால வரே தேவ
ராமவ ருண்ப ரொன்றே
ராசை வாய்ச் சந்தனக்கு
வகைப் பெலிவைத்துப் போற்றும்
நீசருக் கிருள தாகி
நிற்பது வீர சைவம் *(20)*

(எ-ன்.) வீரசைவம் விளங்காதாரியல்பு கூறிற்று.

*(இ-ள்.)* குற்றமே வடிவாய் விளங்கும் மாயைச் சுழிப்பட்ட உலகில் சிக்குற்றிருந்து இறந்தோர் தம்மை தமது பற்றின் மிகுதியால் தேவரவரே என்றும், அவருக்குப் பலி முதலாய பூசைகள் செய்தும், தமது அறியாமையாகிற ஆசையினைப் பல்வேறாகப் பகன்று நிற்கின்ற ஆசை வயப்பட்ட நீசருக்கு வீரசைவம் விளங்காப் பொருளதாக, இருண்மை மிக்கதாகவே தோன்றும் என்பதாம்.

இதனான், வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம் என்ற கருத்தும், இறந்தோரை வழிபடல் ஆகாது என்ற கருத்தும் வீரசைவ நெறிகளாக உரைக்கப்பட்டமை வெளிப்படை.

ஆருயி ரிருக்க விங்கே
யானடி யடைந் திடாமல்
ஆருயி ரகன்ற பின்னர்
அவ்வுயி ரொயிற் சுட்டேக்
கூரிய பரிவால் முத்தி
கூட்டுதற் கெலும்பு கொண்டே
யூர்தொறு முழலு மூமற்
குணரொணா வீர சைவம். (21)

(எ-ன்.) இதுவுமது.

(இ-ள்.) அரிதினமைந்த உயிரிங்கே அமைந்தபோதும் மாணடி சேர்ந்திடாமல், அவ்வுயிரகன்ற பின்னர் உடலோடு உயிரையும் தீயாற் சுட்டு, பரிவு எனும் கூர்மை கூர எஞ்சிய எலும்புகளைச் சேகரித்து அவர்க்கு முத்தி கூட்டுதற்காக ஊர்தொறும் அலைந்துழலும் ஊமர்கட்கு வீரசைவம் என்பது உணரமுடியாதது ஆகும்.

இதனான் இறந்தார்க்கெனப் புரியும் ஈம, பிதுர்க் கடன்களின் சிறப்பின்மை கூறப்பட்டது.

"ஊத்தைச் சடலமடி உப்பிருந்த பாண்டமடி" என்ற தொடர்களையும்,

நந்தவனத்து ஆண்டி அரிதிற் பெற்று வந்த கொள்கலத்தைக் குற்ற மயமாக்கிக் கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்த கருத்தும்,

அவனருளாலே அவன் தாள் வணங்கும் சிறப்பியல்பும் உணர்த்தப்பெற்றன.

## ஆற்றெழுத்தருமை

*அனனடை யுமையாள் பாகனாம்*
*மாறெழுத் தைநிந் தித்(துத்)*
*தின்மலி தேவனா மிவனிதென*
*விரும்பி யேப் பெற்று*
*மனமுறுங் கொடிய பஞ்ச*
*பாதக மடவேற் கென்றுங்*
*கனவிலு முண ரொணாது*
*கற்பது வீர சைவம்.* *(22)*

(எ-ன்.) ஆறெழுத்தின் அருமை புகன்றது.

*(இ-ள்.)* அன்னம் போலும் நடை வாய்ந்த உமையாளை இடப்பாகத்தே பெற்றுள்ள மாதொருபாகனார் தம் 'ஓம் நம சிவாய' எனும் அருநாமத்தை ஓதாமல் பழித்துரைத்து, மயக்கின் காரணமாய் 'இவனே என் தெய்வம்', 'இதுவே என் கடவுள்' எனப்பெற்று அதனாற் தோன்றி விளைந்த பஞ்சமா பாதகங்களும் மடவனாக்கிய நிலையில், அவரால் கனவிலும் வீரசைவத்தின் விந்தைகளை உணரமுடியாது. அம்மன விகாரங்கள் அழிந்த நிலையில் முனைப்புடன் கற்றலே வீரசைவ நெறியுணரும் முறை என்பதாம்.

பற்றின் மிகையே தெய்வங்களைப் பல்கச்செய்யும் மாய்கை, அஃதற்றாரே ஒருமை நெறி பூண்ட வீரசைவராவர் என்பதிதன் விளக்கம்.

## புலான் மறுத்தல்

*உயிர் செகுத் தூனுண் போரு*
*முணவுற நறவுண் போருஞ்*
*செயிர்(தரு) கருவிக டானு*
*முறவெனச் செறிந்த போதி*
*லயர்வுற வெதிர்கொண் டுள்ளே*
*அழைத்திடு புல்ல ரான*

கயவருக் குணரொ ணாது
கற்பது வீர சைவம். (23)

(எ-ன்.) புலால் மறுத்தல் நுதலிற்று.

*(இ-ள்.)* நாவினிமை கருதி ஒன்றன் உயிர் செகுத்து உண்டும், கள்ளுண்டும் துன்பத்துள் சென்றுய்க்கும் புலன்களையே உறவெனக்கொண்டு அயர்வு மனத்தினை அலைக்கழிக்க மேன்மேலுங் கூட்டஞ் சேர்க்க முயலும் புன்மையும் சிறுமையும் நிரம்பிய வீணர்களுக்கு உணரமுடியாததாய், இவ்விழி தகைமையகன்ற நிலையினர் முயன்று கற்பதாயமைவதே வீரசைவமாகும்.

இதனான் 'அவிசெரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று' என்று பொய்யாமொழி வீரசைவத்துள் பொருத்துமாறு விளக்கப்பட்டது.

**நுட்பம்**

ஓதரும் பிராண லிங்கம்
வுயிர்க்குயி ரென்றோ ராமல்
மேதகு லிங்கத் துக்குந்
தனக்கும் வேறாகக் கொண்டே
கோதறு மனத் தினாலே
குறித்தருச் சனையைச் செய்யுஞ்
சூதகற் குணரொ ணாத
சூக்குமம் வீர சைவம். (24)

(எ-ன்.) வீரசைவத்தின் நுட்பம் நுவன்றது.

*(இ-ள்.)* சொல்லுதற்கருமைத்தாய, பிராணலிங்கத் தினையே உயிருக்கு உயிரென சிந்தியாமல், அதனையும், தன்னையும் பேதமாய் வேறுவேறெனக்கொண்டு குற்றமிலா மனத்தனாயினும், மன மயக்கத்துடன் இலிங்கங் குறித்தருச்சனை புரியும் சூதகற்கு உணரமுடியாத சூக்குமத் திறம் வாய்ந்தது வீரசைவமாகும்.

இதனான் சிவோகம் பாவனை கூறினார். அகம் பிரம்மாச்மி என்பர் வடநூலார்.

உள்ளம் பெரும் கோயில், ஊனுடம்பு ஆலயம்... என்றார் திருமூலர்.

ஓடியோடி யோடியோடி உட்கலந்த சோதி என்றார் சித்தர்.

சத்தத்துள் சதாசிவங் காணு முறை காட்டலாயிற்று.

**ஓட்பம்**

இட்டலிங் கத்தை யெண்ணா
தவமதித் திந்தப் பார்மேல்
மட்டறு தீர்த்த லிங்கம்
வணங்குதல் கதியா மென்று
நெட்டியைத் தூர மேக
நினைந்திடு மடவா ரான
மூட்டருக் குணரொ ணாத
முதன்மையாம் வீர சைவம். (25)

(எ-ன்.) இட்டலிங்கத்து முதன்மை கூறிற்றாம்.

(இ-ள்.) இட்டலிங்கத்தை மனத்துள் சிந்தியாது அவமதித்து இந்நிலவுகிலுள்ள தீர்த்த லிங்கங்களை வணங்குதலே வாழ்வு என மயங்கி மாழ்குவாரை; மடமையின் மக்களை அணுகாத, விளங்காத முதன்மை வாய்ந்தது வீரசைவமாகும்.

தன்னையுணரத் தான் தெரியும்மே என்பாருரை வீரசைவ நெறிப்பாடல் காண்க.

மூடர் முட்டராயிற்று எதுகை நோக்கி.

## வேட்டல் முறை

காதலன் பிராண லிங்கம்
　　காரிகை பவிய மாகில்
வேதியன் புலைச்சி தன்னை
　　விரும்பியே மருவ லொக்கும்
போதியா தவர்க ளில்லிற்
　　பொசித் திடுந் தீயரான
பாதகற் குணரொ ணாத
　　பான்மையாம் வீர சைவம். (26)

(எ-ன்.) வீரசைவ வேட்டல் முறை கூறிற்றாம்.

(இ-ள்.) ஆன்மாவின் காதலன் பிராணலிங்கமாயும், கன்னி பவ்யமெனும் பண்பாகவும் அமையுமேயானால் அச்சேர்க்கையானது நான்மறையாளன் ஒருவன் புன்மை நிரம்பிய புலைச்சி ஒருத்தியைக் காதலித்துக் கலத்தலொக்கும். தரமுற்ற ஞானத்தினைப் பிறர்க்குப் போதித்தருளாதவர்களின் வீட்டில் உண்டு மகிழும் களியரான பாதகரால் உணர முடியாதது வீரசைவமாகும்.

உருவக உவமைகள் நுதல் பொருளை விளக்குதற்கான வழக்குகளாகக் கொள்க.

## மலரடி மாண்பு

எல்லையில் தவத்தி னாலே
　　யிறையடி வழூற்றம் பெற்று
மல்லலாம் பிறவி நீக்கு
　　மாணடி யடைந்தி டாமல்
நல்ல வானவர் களின்படி
　　நயந்தருச் சனையில் வேண்டும்
புல்லரா லறியொ ணாது
　　போற்பது வீர சைவம். (27)

(எ-ன்.) மலரடி மாண்பு புகன்றது.

*(இ-ள்.)* எல்லையில்லாத தவத்தினாலே அவன் தான் வழுத்தி, அல்லலுறும் பிறவி நோய்களைதற்குரிய நிலையில் மாணடி சேர்தலுறாமல், வானோரின் வாக்கிலே மனமயங்கி அருச்சனை புரிதலில் மாழ்கி யொழியும் புல்லரால் அறியவொண்ணாப் பெரும்புகழ் வாந்தது வீரசைவமாகும்.

இதனான் பிறவிப் பெருங்கடல் நீந்தற்கும் வாழ்நாள் வழியடைத்தற்கும் மலர்மிசை ஏகினான் மாணடி சேர்தலே புணை எனப்புகன்றார்.

சிந்தையுள் கொள்ளாது, வெறுமே சுற்றிவந்து முணுமுணுத்துச் சொல்லும் மந்திரத்தின் பயனின்மை கூறினார்.

வழுத்தம் 'வழுற்றம்' எனக் குறிக்கப்பட்டது.

**வீரசைவர் மேன்மை**

இரவிபோ லுலக மெங்கு
மேகனே குருவெண் ணாமல்
மருவிடு மனைவி தானும்
மகுணனும் வேற தாகக்
குருவினைப் பகுத்துத் தீர்க்கை
கொண்டிடு மூட ரில்லிற்
பருகுவோற் குணரொ ணாத
பான்மையாம் வீர சைவம். *(28)*

(எ-ன்.) வீரசைவ முணர்வோர் பான்மை பகன்றது.

*(இ-ள்.)* உலகிற்கு ஒளி வழங்கும் ஞாயிறு எவ்வாறு தனிப்பெரும் முதல்வனாக உள்ளானோ அதுவே போன்று ஒருவனே குருவெனக்கொள்ளாமல், தானணைந்த மனைவியையும், மகனையும் வேறாயும் குருவினை

வேறாயும் பகுத்துணர்ந்து முடிவுகொண்ட மூடர்தம் இல்லிற் தாகத்திற்குத் தண்ணீரருந்தியவர்க்குக் கூட உணரொணாத பான்மை மிக்கது வீரசைவமாகும்.

"காணுங் கண்ணிற்குக் காட்டும் ஞாயிறு" என்பது சிவஞான போதம். காணவுள்ளத்தைக் கண்டு காட்டும் இறைப்பேருண்மை இதனான் புலனாயிற்று.

**கோலம்**

கோவண மோக மாடை
　　கூட்டா வகன்ற தீர்மை
காவரும் பொறைமுன் னூலாங்
　　கப்பரை யவிநகர ரந்தென்
டோவினைம் புலனை வாட்டும்
　　வொளி நிகழ் ஞானமாகுந்
தாவில் முத்திரை யோரைந்துஞ்
　　சங்கமஞ் தரிப்ப தாமே. (29)

(எ-ன்.) வீரசைவக் கோலமுணர்த்திற்று.

*(இ-ள்.)* கோவணமே ஆடை, தீமையகன்ற உள்ளம்; உளத்தைக் காத்திடும் பொறுமை; முப்புரிநூல், கப்பரை, தண்டு இவற்றுடன் ஒருமையுள் ஆமைபோல் ஐம்புலவொடுக்கம் கொண்டு திகழுங்கால் ஞானவொளி வீச; குற்றமற்ற ஐவகை முத்திரைகளையும் சங்கமமாய்த் தரித்தலே வீரசைவத் தோற்றமென்க.

**இலக்கணம்**

சத்தியஞ் சவுச மாகுஞ்
　　சாந்தநீ றலை விலாத
சித்தமே ருத்தி ராக்கஞ்
　　சின்மயம் யோக வேடம்

நித்தியா னந்தங் கந்தை
நிராமயம் கிரீட மென்றுந்
தத்துவம் பதுமை யாகச்
சங்கமம் தரிப்ப தாமே. (30)

(எ-ன்.) வீரசைவரிலக்கண முணர்த்திற்று.

*(இ-ள்.)* சத்தியமே நிலைப்புண்மையாக, சாந்தமே குணமாக, நீறுபூசிய நெற்றியுள் அலைவிலாத சித்தமாக உருத்திராக்கம், சின்முத்திரை முதலாயின யோக வேடமாகி கந்தை மிகையாக, நித்தியம் ஆனந்தமாக, நிராமயமே முடியாக, தத்துவம் பதுமையாக வேடந்தரிப்பதுவே வீரசைவ நெறி என்க.

இதனான் அகம், புறம் இவற்றானாய விளக்கம் கூறலானார்.

கொண்ட கொள்கையிலுறுதியும், சீலமும், சிவவேடமுமே வீரசைவ வித்தெனக்கொள்க.

**சிவகாரச் செவ்வி**

செறிதரு கரண நான்குஞ்
சிவகார மாகுஞ் செச்சை
யறிவதாம் பிரிவி லாத
வானந்த முதக மாகும்
வெறிமல ரமுத மாகும்
மிக்க மெய்ப்பத்தி நேயங்
குறிநவ பேத மேக
மாகிய கொள்கை யோர்க்கே. (31)

(எ-ன்.) சிவகாரச் செவ்வியுணர்த்தலாயிற்று.

*(இ-ள்.)* அந்தக் கரணங்கள் நான்கும் சிவகாரமாகும். செச்சையினை அறிவதே பிரிவற்ற ஆனந்த உதகமாகும்.

மணம் நிறைந்த அமுதமாகும். மெய்ம்மைப் பத்தியும், மிகுந்த நேயமும், ஒன்பது வகைப்பட்ட பேதங்களும் அகன்ற ஏகமனமும் வீரசைவக் கொள்கையோர்க்குரிய சீலங்களாம்.

கொள்கையுரவோர்க்கு எதுவெதுவாகும் என்பதுணர்த்து முகத்தான் வீரசைவ விளக்கம் புகன்றார்.

**வீரசைவர் திறம்**

அற்பக லுணரா ரைவ
ரரும்பெருஞ் செல்வம் பேணார்
கற்பனை விகற்ப மில்லார்
சமனமீ றுதிப்பொன் றில்லார்
பொற்புறு லிங்க லீலைப்
பொலிவலால் வேறு காணார்
சிற்பர வீர சைவத்
திறத்தினை விரும்புஞ் சீலர். (32)

(எ-ன்.) வீரசைவர் திறம் புகன்றது.

(இ-ள்.) ஐம்புலனை யொடுக்குதலின் பகல்; இரவு முதலாய உலக உண்மை நிகழ்வுகளைக் கூட உணரார், ஓடுஞ்செம்பொனும் ஒக்கவே நோக்குவார்; கற்பனையுள் கூட வேறுபாடு கருதார், பிறர்மேல் தனக்கென விருப்பு வெறுப்பு ஒன்றுமில்லார், சிறப்புறு இலிங்கலீலைப் பொலிவின்றி வேறு சிந்தியார், காணார், இவரே சிற்பரச் சிறப்பு வாய்ந்த வீரசைவத்தினை விரும்பி ஏற்கும் சீலர்தம் சிறப்புக்களாகும்.

நிறைகுறை விரண்டு மில்லார்
நினைப்புடன் மறப் பொன்றில்லார்
மறைநெறி மகிட்சி யில்லார்
வையகப் பொய்யில் லாதார்
தரைமுதல் சிவம தீறாந்
தத்துவா தீத வின்பஞ்
செறி தரும் வீரசைவத்
திறத்தினை விரும்புஞ் சீலர். (33)

(எ-ன்.) வீரசைவர் திறம் புகன்றது.

*(இ-ள்.)* மனத்தின்கண் நிறைவு, குறைவு என்ற வேறுபாடு இரண்டுமில்லார்; நினைவு, மறதி ஆகிய இரண்டு மற்றோர்; மறைநெறிகளில் மகிழ்வு பெறார். உலகில் பொய்மையில்லார்; மண் முதல் சிவதத்துவம் ஈறாக உள்ள தத்துவதீத இன்பத்துள் திளைத்தவர்கள்; இவர்களே வீரசைவத்தினை விரும்புதற்குரிய சீலராவர்.

மகிழ்ச்சியினை மகிட்சி என்றார் வழக்கு வன்மையாள்.

## தீக்கை முறை

சதமகம் புரிசோ மாசி
சன்னியா சத்தோர் நூல்கள்
அதிகமாய் வல்ல ரேனு
மங்கலிங் கிகளல் லாத
மதவரைப் பரிசத் தாலு
மலிபுலன் தீக்கை வேண்டுந்
திதமலி வீரா சாரப்
பத்தராஞ் சீலத் தோற்கே. *(34)*

(எ-ன்.) தீக்கை வேண்டும் திறமுணர்த்திற்று.

*(இ-ள்.)* வல்லாண்மை மிக்க சன்னியாசியார் அருளிய பண்டார நூல்களைப் பழுதறக் கற்று வல்லாரேனும் அங்கலிங்கிகளல்லா நிலையில் வேறு மதத்தினரைப் பார்த்தாலும் உற்றாலும், அந்நிலைபுலன்களின் தூண்டலாற் பெற்றதாதலின் தீக்கை வேண்டும். தீதறு வீரசைவப் பத்தராஞ் சீலத்தோர்க்குரிய வழிமுறை இதுவேயாம் என்க. இதனான் இலிங்காய தீக்கை பெறும் தேவை உணர்த்தினார். சன்னியாசத்தோர் நூல்கள்-பண்டார சாத்திரங்கள் ஆகும்.

## தீக்கை வேண்டுவோர்

உயிரளித் துடனே வாங்கி
யொடுக்கிடும் பிரேத லிங்கம்
பயில்வுட னரிச்சித் தேத்தும்
பதகரைப் பரிசித் தோர்கள்
செயிர்புன தீற்கை கொள்ள
வேண்டிடுஞ் செய்யா ராகில்
னாருநா கணைத்து மூழ்கி
யரும் புலையர் களாமே. *(35)*

(எ-ன்.) தீக்கை வேண்டுவோர் இவரென்றது.

*(இ-ள்.)* உயிரளித்தும், நீக்கியும் சித்து விளையாட்டு புரிந்திடும் பிரேதலிங்கப் பயில்வுடன், அருச்சனை புரிந்து வழிபடும் கேவலிகளுடன் உற்று வாழ்ந்தோர் வீரசைவமேற்க வேண்டின் சீரிய தீக்கை கொள்ள வேண்டும். அவ்வணம் தீக்கையேலாதோர் புன்மையால் நாளும் நாயணைந்து வாழும் புலையர்கள் எனவே கொள்ளப்படுவர் என்பதாம்.

இதனான் சிற்றினஞ் சேராமையுணர்த்தினார். தீக்ஷை, தீக்கையாகி ஈண்டு தீற்கை என வழங்கப்பட்டது.

முற்றிகழ் சைவங் களாகும்
முகம்மாசு பதமுன் னாரும்
மற்றவர் முன்னூல் வேணி
நயந்தோத மங்க லிங்கப்
பற்றலாதவரைத் தீண்டிற்
பகர்புன தீற்கை வேண்டுஞ்
செற்றமில் வீரா சார
நெறிபுரி சீலத் தோர்க்கே. *(36)*

(எ-ன்.) இதுவுமது.

*(இ-ள்.)* அகச்சமயங்களாயினும் முற்றிலும் இகழத்தக்க பாசுபதம் முதலாய மதங்களும் அவர்தம் சாத்திரங்களும்,

பின்பற்றத் தக்கவல்ல. மேலும் அங்கலிங்கப் பற்றில்லாத வரைத் தீண்டினும் புனலாடித் தீக்கை பெறல்வேண்டும். இதுவே வீர சைவத்தினை குற்றமிலாதேற்கும் குணமுறையாகும்.

இதனான் வீரசைவம் புகுவார்க்குரிய ஒழுகலாறு ஓதப்பட்டது.

**வேணி:** உயர்நெறி நூல்.

### தெய்வீகம்

*மாலய னிரவி சோமன்*
*மகபதி முதல்நா லெட்டோர்*
*மேலுயர் கோடி தேவ*
*ராயினும் விமல ரேனுங்*
*கோலமா மங்க லிங்க*
*மில்லையேற் குறித்து னோக்கா*
*சீலமாம் வீரா சார*
*நெறிபுரி திறலி னோரே.* *(37)*

(எ-ன்.) தேவர்க்குமரியது வீரசைவம் என்றது.

*(இ-ள்.)* திருமால், பிரமன், சூரியன், சந்திரன், இந்திரன் முதலிய முப்பத்திருவகைத் தெய்வங்களாயினும், உயர்ந்த முப்பத்து முக்கோடி தேவர்களாயினும் குற்றமில்லா நன்னெஞ்சராயினும் சிறப்புமிக்க அங்கலிங்கமில்லா தோராயின் அவரால் வீரசைவ நெறிகளை நோக்குதற்கும் அரியதாகிய திறங்கொண்டது வீரசைவமாகும்.

### பிறவிநோய் மருந்து

*பொருவரு முயிர்கட் கெல்லாம்*
*புகலரு மின்ப முத்தி*
*யிருவினை யகற்றி னல்லா*
*லெய்தொணா வின்ப துன்பந்*

தருவினை யகற்று மேனி
சங்கம மாகு மென்றே
பரிவுறும் பிறவி நீக்கும்
பக்குவ ரறிந்து போற்றும். (38)

(எ-ன்.) பிறவி நீக்கும் பேறுணர்த்திற்று.

*(இ-ள்.)* அரிய உயிர்கட்கெல்லாம் இன்பம், முத்தி என்பன அமைவதென்பது இருள்சேர் வினை அகற்றிய பொழுதேயாகும். இன்றேல் அவை எவ்வனம் முயன்றாலும் வந்துறா. அவ்வினையகற்றிய போழ்தே இறையருள் உயிருள் கலந்து பிறவிப்பெருநோயை மலபரிபாகமறிந்து அதற்கேற்பக் களையும் என்பதாம்.

பிறவி - பிறப்பு நோய்.

பக்குவர் - மலபரிபாகம் அடைந்த கேவலிகள்.

அருவினை என்றார் அதனாற்றல் தோன்ற.

**சங்கம பூசை**

சங்கமம் பொருளெண் றெண்ணார்
தாமாக விரும்பி யேற்றி
லங்கவர் பெறும்பே றில்லை
யண்ணலா ராணை திண்ணஞ்
சங்கம பூசை தானே
தவகுரு லிங்க வேட
மங்கவை மூன்று மொன்றாய்
அற்புத மாகு மன்றே. (39)

(எ-ன்.) சங்கம பூசை முறையுணர்த்திற்று.

*(இ-ள்.)* சங்கம பூசனையினை ஒரு பொருளென மதியாமல் தமது விருப்பிற்கேற்ப மேற்கொள்வார்க்கு அப்பூசனைப் பலன்கள் எந்நிலையிலும் வந்துறா. இது சிவனார் மேல் ஆணை. தவசீலம் மிக்க குருவும், லிங்கமும்,

சிவவேடமும் ஒன்றி அபேதமாய், அத்துவிதமாய் சங்கமிப்பது அச்சங்கம பூசனையிலேயே தம் மனம் ஒருப்பட்டு நிற்கும் மாதவத்தோர்க்கே என்பதாம்.

**அங்கலிங்கம்**

அங்கலிங் கத்தை யெண்ணா
　　தயாபதி தீர்த்த லிங்கம்
பொங்கிய பரிவு கூரப்
　　போயணிந் திடுவோர் நீர்மை
மங்குறு களவிற் சோர
　　மகுணன்பால் மணம் புணர்ந்து
தங்கண வனையுங் கொண்டு
　　சாருனா ரியானே ராமே. *(40)*

(எ-ன்.) அங்கலிங்க வழிபாட்டுச் சீல முறைக்கிறது.

*(இ-ள்.)* அங்கலிங்கத்தை மனத்தகத்தே சற்றும் எண்ணாமல் தயாபதியாம் தீர்த்த லிங்கத்தினை பொங்கி யெழும் அன்பினால் விரும்பிச்சென்று அணிவாராது தன்மை களவுத் தன்மையாக பிற ஆடவனொருவனையும் புணர்ந்து பிறரறிய தங்கணவனுடனும் புணர்ந்து வாழும் வேசிப் பெண்ணுக்குச் சமமாகும்.

இதனான் கொள்கைப் பற்றின் இன்றியமையாமை உணர்த்தினார்.

**அங்கலிங்க அருமை**

மாண்பயி லிங்க மில்லார்
　　மற்றொரு பதியிற் சென்றே
காண்பரு மிலிங்க நாடி
　　கருத்துற வணங்கல் கண்டுஞ்
சேன்பயி லிங்க மங்கத்
　　திருக்கவுஞ் சிந்தை செய்யார்

*வீண் பல கற்றுந் தீயர்*
*விதிவச மந்தோ அந்தோ.* *(41)*

(எ-ன்.) அங்கலிங்க அருமையுணர்த்தினார்.

*(இ-ள்.)* பெருமை மிக்க இலிங்கத்தைப் பெறாதோர் பிறிதோர் பதிக்குச் சென்று அங்குள்ள இலிங்கத்தினைத் தேடிக்கண்டு வணங்கும் செவ்வி கண்டும் அங்கலிங்கத்தைத் தங்கள் உளங்கொளச் சிந்தியார்கள். வீணாகப் பல கற்றும் விதிவசத்தால் தீயராகவே விளங்குகின்றனர் என்றவாறு. அந்தோ! அந்தோ! என்பன இரக்கக் குறிப்புத் தர நின்றன.

இதனான் பல கற்றும் அங்கலிங்கம் பேணாதார் அறிவிலிகளே என்றார்.

### ஆன்றோரே அரன்

*அங்கலிங் கத்தோ ரெல்லா*
*மரன்றிரு வுருவ மாவ*
*ரங்கலிங் கத்தோ ரென்று*
*மாக்கமு மழிவு மில்லா*
*ரங்கலிங் கத்தை நீங்கும்*
*தான் வாழலின மாய்ந்தா*
*ரங்கலிங் கத்தை நீங்கா*
*மூவரு மருள் பெற்றோரே.* *(42)*

*(இ-ள்.)* அங்கலிங்கத்தோர்கள் அனைவரும் அரனுரு ஆவர். அங்கலிங்கத்தோர்க்கு ஆக்கமோ அழிவோ என்றும் இல்லை. அங்கலிங்கத்தை நீங்கித் தான் வாழாமல் இனத்தையும் நீக்கும் சீலர்கள் பேறு பெறுவர். இவ்வணமே அங்கலிங்கிகளாக வாழ்ந்தமையே முப்பெருங் கடவுளர்க்கும் அருளாக்கம் பெறச் செய்த அருமை என்றது.

இதனான் கடவுளராயினும் அங்கலிங்கம் கொண்டாலன்றி அருள்பெற வேலாதென அங்கலிங்கத் தவசியமுணர்த்தினார்.

மூவரைத் தேவரென்றும், முப்பத்து முக்கோடியின ரென்றும், திருமால், பிரமன், சிவன் என்றும் உரைப்பர்.

அன்றி விஞ்ஞான கலர், பிரளயா கலர், சகலர் எனவுமுரைப்பாருமுண்டு.

எல்லாம் அங்கலிங்க அருமையினை உணர்த்துவனவே.

**அடியவர் பெருமை**

குலங்குணம் விசிட்ட ரேனுஞ்
குணங்குல மில்லா ரெனுங்
சலமதி முடியார் வேடந்
தரித்தவர் தமைக் கண்டோர்கள்
நலமுட னெதிர்சென் றேத்தி
யாசனம் நல்கா ராகில்
அலமுறுந் துயரம் நீங்கார்
ரவுரவ நரகிலாழ் வார். *(43)*

(எ-ன்) சிவனடியார் போற்றுந் திறல் கூறிற்று.

*(இ-ள்.)* குலம், குணம் இவற்றை உலக வழக்கின்படி ஏற்று வாழ்ந்து வேதாந்தியாயினும் கங்கை, பிறை, சடாமுடி தரித்த சிவவேடம் புனைந்த சிவனடியார்தமைக் கண்டால் எதிர் சென்று தொழுது ஏத்திப் புகழ்ந்து ஆசனம் நல்கி அவர்தமை சிறப்புச் செய்து வாழாராகின், கூறுதற்கரிய துயரங்களை வாழ்வில் நீக்க முடியாதவராயும் துன்பமிகு நரகினில் மூழ்கியழிவாராயும் ஆதல் திண்ணம்.

இதனான், "மலற நேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந் தாமு மரனெனத் தொழுமே என்ற சிவஞானபோதத் தெளிவுரைத்தார்.

**சிவனடியாரைப் பழித்தோர் எய்தும் பழி**

அராவணி வேணி யண்ணல்
அடியவர் தமைநிந் தித்தோர்

வராகமா யனேக சென்மம்
மலமது பொசித்த பின்னர்
தராதல மிசையே பொல்லாச்
சண்டாளற் கடிமை யாகிப்
பராவுறு பசியால் நோயாற்
பயத்தினால் வருந்து வோரே. *(44)*

(எ-ன்.) சிவனடியாரைப் பழித்தோரெய்தும் பழி கூறிற்று.

*(இ-ள்.)* பாம்புகளையே அணிகலனாயணியும் கங்காதரனாரின் அடியார்களாகிய சிவனடியாரைப் பழித்துரைத்தவர்கள் பன்றியாய்ப் பிறப்பெடுத்து பல பிறவிகளிலும் மலத்தினைத் தின்று பின்னர் இப்பூவுலகில் சண்டாளரெனப்படும் கீழ் மக்கட்கு அடிமையாகி, பசி, பிணி, பயம் இவற்றால் வருந்தி நலிவர் என்பதாம்.

எனவே சிவனடியாரைப் போற்றலே சிவனாரைப் போற்றலாம் என்றவாறு. இன்றேல் இழிதகைமை எய்த நேரும் என்றார்.

முழுத்தவ வேடந் தோரை
முனிந்துநிந் தித்தோ ரந்தப்
பழிப்பரை கெட்டோர் தீயப்
பிறரைக் கோறல் செய்யா
வழுக்கு மன்னவனுந் துன்பத்
தழுந்துவ னடியார் பாதம்
வழுத்து மன்பரைக் கண்டோர்கள்
மருவுவார் பரம லோகம். *(45)*

(எ-ன்.) இதுவுமது.

*(இ-ள்.)* சிவவேடம் பூண்ட சிவனடியார்களைச் சினந்து பழித்துரைத்தோரும், அவ்வணம் பழித்து உரைப்போரை, அத்தீயரைத் தண்டியாமல் நீதியினின்றும் வழுக்கும் மன்னனும் துயர சாகரத்தழுத்துவர். ஆயின் சிவனடியார்

தமைப்போற்றி அவர்தம் பாதம் பணிந்தேத்துமன்பரைக் கண்டோர்கள் மறுமைச் சுகத்தினைப் பெற்று இன்புறுவர் என்பதாம்.

இதனான் போற்றாரது பழியும், போற்றுவாரது புகழும் குறித்தார்.

முழுத்தவ வேடமாவது, காவி, உத்திராக்கம், முழு நீற்றுப்பூச்சு, கண்டிகை, முதலாயினவும், சிவமந்திரச் செபிப்பும், யோகநிலையும், சிவச்சிந்தனையுமெனக் கொள்ளல் வேண்டும்.

**நடமாடுங்கோயில்**

அருஞ்சிலை யதனாற் றேவ
றாக்கிஆ லையமு மந்த
விருஞ்சிலை யதனாற் செய்யி
லிரண்டுமொன் றென்ன லாமோ
தருத்தவம் வேடம் பூண்டு
தமருட னிருந்தோர் தம்மை
வருங்குல மதிலொன் றாக
மதிப்பவ ரலகை யொப்பர். (46)

(எ-ன்.) நடமாடுங் கோயிலின் நயமுரைத்தது.

*(இ-ள்.)* அரிய கருங்கல்லாற் சிலை படைத்து, அச்சிலையினைத் தேவனாகக் கொண்டு, அச்சிலையினை விளக்கம் செய்ய அதற்குக் கோயில் எடுத்து வழிபடல் ஆகிய இரண்டு சூழலும் செம்மையானவைதாமா? நல்ல வணக்கமுறை அன்று. சிவவேடம் பூண்டு சீலருடனிருந் தோராகிய சான்றோரை, தம்மைப் போலும் மனித குலத்துள் ஒருவராக, ஒரு குலத்தாராகவே கருதுவார் பேயினையொப்பர்.

இதனான் உருவ வணக்கத்தினைக் காட்டிலும் விஞ்சு புகழ்படைத்த சிவனடியார் திறமுணர்த்தினார்.

இது குறித்தே சித்தர்களும், புறப்பூசனைகளை ஒதுக்கி ஆன்ம நேயம், தொண்டு இவற்றாலாய பயனுரைத்தனர். திருமூலரும்.

படமாடுங் கோயில் பரமர்க்கொன் றீகில்
நடமாடுங் கோயில் நம்பர்க்கங் காகா
நட மாடுங் கோயில் நம்பர்க்கொன் றீகில்
பட மாடுங் கோயில் பரமர்க் கங்காமே. என்றனர்.

ஆதலின் கற்சிலைகளைக் காட்டிலும் சான்றோர்களை சிவனடியார்களைப் போற்றுகவென்பதாம்.

**பாவ நீக்கம்**

தேனுமா மருவ னேகந்
தெரிவயர் கோடி கோடி
மானமா மறையோர் கோடி
வனதத்திற் கோடி பாவங்
கோனுமா பதியோ னாணைக்
குருலிங்கச் சங்க மத்தின்
மேனிமே லுதிரம் பூமே
லொருதுளி விழனு மன்றே. *(47)*

(எ-ன்.) சங்கமத்தாலாகும் பாவ நீக்க முணர்த்திற்று.

*(இ-ள்.)* தேனினுமினிய மக்கட் காதலாலும், அன்பிற்கினிய தெரிவையரின் மேற்கொண்ட காதலாலும், மறை, மானம் இவற்றால் மிக்க மறைவலாராலும் பெருக்கமுற்ற கோடிகோடி பாவங்களையும், குருலிங்கச் சங்கமத்தின் மீது பற்றுக்கொண்ட போழ்து பூமேலுற்ற ஒரு சிறு நீர்த்துளி யாங்ஙனம் கதிரவனொளியாற் காணாமற் போகுமோ அவ்வணமே மாய்த்தொழிக்கலாம். இஃது உலகின் முதல்வனாம் சிவனார்மேல் ஆணை என்றவாறு.

## சங்கமப் பயன்

இணக்குறு தோற்ற நான்கில்
யெழுவகைப் போக மாகக்
கணக்குறு மீரா ரேழு
கருநெறி யோனி தோறும்
வணக்குமும் மலநும் போத
மருளுறும் பிறவித் துன்பப்
பிணக்கறு மவரே லிங்கச்
சங்கமம் பேணு வோரே. *(48)*

(எ-ன்.) சங்கமத்தாலாய பயனிதுவெனக் கூறியது.

*(இ-ள்.)* இணங்கித் தோன்றும் நால்வகைத் தோற்ற வகைகளில் எழுவகைப்பட்ட போகமமைய, அதனான் எண்பத்து நான்கு வகைப்பட்ட யோனிகளின் வழியே மும்மலச் சேர்க்கைக்கிணங்கப் பிறவி நோயுற்று இருண்மையுற்று வருந்துவோர்தம் வல்வினைத் துன்பங்களும், பிறவிநோயும் இலிங்கச் சங்கமத்தால் நீங்கிப்போம் என்றவாறு.

இதனான் குருலிங்கச் சங்மத்தார்க்குப் பிறவி நோயுறாமை கூறினார்.

ஈராறு ஏழு என எண்பத்து நான்கு எனுமிலக்கத்தினைக் கட்டுரைச்சுவைபடக் கூறினர்.

## சிவனடியாரைப் போற்றல்

உயிரி (யக்) கங்க ளோரா
தும்பரைப் போற்றும் பேறு
மயிரிலக் காகு மென்று
மாலயன் றன்னைப் போற்றல்
செயிர்தரு வரையிலக் காகுஞ்
சிவனடி யவரைப் போற்றல்

நயமிகு புவியி லக்காய்
நாடிய சிலையொப் பாமே. (49)

(எ-ன்.) சிவனடியாரைப் போற்றும் பேறுணத்திற்று.

(இ-ள்.) உயிரின் இயக்கங்களை மனத்துள் ஓர்ந்து தேறாமல் வெறுமே தேவர்களைப் போற்றும் பத்தியானது தலையினிழிந்த மயிரினை ஒப்பதோர் இலக்கமதாகும் என்றும் திருமால், பிரமன் ஆகிய வேறு பெருங்கடவுளரை வணங்குதலாவது குற்றத்தினை (அல்லது காழ்ப்பினை) குன்றாக்கி வளர்த்திடும் இலக்கமாகும். சிவனடியாரைப் போற்றி வாழும் நயத்தக்க நாகரிக இக வாழ்க்கை ஒன்றே தேவர்ப்பராய வாழ்வினதாக சிலையினைப் பராவுவதாக அமையும் என்பதாம்.

இதனான், தேவர்ப் பராவலும், திருமாலயன் பராவலும் விளைக்கும் குற்றங்களும், சிவனடியார்களைப் போற்றலால் பெறும்பேறுகளும் உணர்த்தினார்.

## அடியவர் பெருமை

கண்ணுதல் காணார் தம்மைக்
கரமுதற் றொழுது போற்ற
மண்ணுல காள வேண்டில்
மலர்ப்பத மிறைஞ்சி யேற்றும்
விண்ணுல காள வேண்டில்
விரிநர கேழு மூழ்க
வெண்ணம துடைய ராக
லிடர்செயக் கருது வீரே. (50)

(எ-ன்.) சிவனடியாரைப் போற்றும் பயன் கூறிற்று.

(இ-ள்.) தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே என்ற வகையில் கண்ணுதல் பெம்மானும் காணற்கரிய சிவனடியாரைத் தொழுது போற்றல் நற்பயன் விளைவிக்கும்.

அவர்தம் மலர்ந்தாள் வணங்கி வழுத்தின் மண்ணுலகாள லாகும். விண்ணுலகாள விரும்பின் ஏழ்நரகத்திலுய்க்கும் பாழ்ச்சிந்தனைகளை ஒழித்து நல்லெண்ணெங் கொண்டோ ராய் விளங்குவீராக வென்பதாம்.

இதனை, தன்னை நன்றாகவும், பாழாகவும் செய்வான் தான் என்ற உண்மை வழி விளக்கப்பட்டதறிக.

### அரனார்க்களி

அரனடி யவர்க் கன்பர்க்
காதன மாடை யன்னங்
கரிபரி சிவிகை யாதி
கனக நன்மணியே யாவும்
பரிவுடன் மாறெண் ணாமல்
அளிப்பரே பரத்தி லெய்வர்
வரமவை வேண்டி நல்கில்
மனநினை வெல்ல லாமே. *(51)*

*(எ-ன்.)* இதுவுமது.

*(இ-ள்.)* சிவனடியார்க்கும், அவரன்பர்க்கும் தேவைப் பட்டாங்கு இருக்கை, ஆடை, உணவு, யானை, குதிரை, பல்லக்கு முதலிய வாகனங்கள், பொன், நல்மணிகள் முதலானவற்றை, மனவிகற்பமின்றி மலர்ச்சியுடன் அளிப்பவர் எவரோ அவரே பரத்தின்பமெய்துவர். அந்நிலை வரங்களால் மன நினைவுகளை வெல்லலாகும் என்பதாம்.

### கொடைச்சிறப்பு

பொன்னவ மணிகள் நல்கில்
புரந்தரன் வணங்க வாழ்வ
ரன்ன மொடுதக நல்கி
யரியயன் பரவ வாழ்வ

குன்னகஞ் சுரபில் நல்கி
ஓருத்திர கணேச ராவர்
மன்னிய வீச னன்பர்
மகிழ்வுற வணங்கு வோரே. (52)

(எ-ன்.) கொடைச்சிறப்பு நுதலிற்று.

(இ-ள்.) பொன், நவமணிகள் முதலியவற்றைச் சிவனடியார்க்கு நல்குவோர் இந்திரனும் வணங்கத்தக்க பெருவாழ்வு வாழ்வர். உணவு கொடுத்து அதற்குரிய பிறவற்றையும் அளிப்போர் திருமாலும், பிரமனும் போற்றித் துதிக்கத்தக்கப் பெருவாழ்வு வாழ்வர். உள்ளம் மகிழ உடல் தொண்டாற்றுவோர் உருத்திரகணேசராவர். இவையாவும் மன்னுபுகழ் சிவனாரின் அடியவர்களை மனமுற வணங்குவோர்தம் பெருவாழ்வு நிலைகளாகும்.

இதனான், "ஒல்லும் வகையான் அரனன்பர்க்கறஞ் செய்க" என்றார்.

### சிவ சூரியன்

அருந்தவ மகேசர் வெய்யி
லழலுறச் சிறகி னாலே
பருந்தது நிழல் செய்த
பலமதற் கேட்பார் முற்றும்
விரிந்தொரு கவிகை நீழல்
வெந்தெனப் பரிந்த தென்னாற்
பெருந்தவ றக்கமுண் டாக்கப்
பெறுமவர் பேறென் சொல்வாம். (53)

(எ-ன்.) சிவனடி நிழலின் செம்மை பகன்றது.

(இ-ள்.) கருதற்கரிய தவவன்மை மிக்க சிவசூரிய வெயிலின் கடுமை பெறாது தமது சிறகுகளால் பருந்தொன்று சூரிய வெளியில் நிழல் தந்தமையினைக் கருதி, விரிந்த

கவிகை நிழலை வெய்யது எனப் புகல்வர் தம் மதிக்கேட்டினை என்னென்றுரைப்பது? என்பதாம்.

இதனான் அவனருளாலே அவன் தாள் வணங்கும் முறையும், அவனே வெய்யில், அவனே நிழல் என்பதனையும் உணர்த்தினார்.

**சுவைக்கனி**

அறுசுவைப் பழங்க லீசன்
அடியவர்க் களித்தி டாம
லுறவுடன் தாப ரங்கட்
குபசரித் தாட்டு நேயஞ்
செறிதரு மான் பா லுண்ணு
முரகனைச் சினந்து சாடி
வரியதேச ரிவைக னாட்டி
மற்றதற் கருத்து மாறே. (54)

(எ-ன்.) அடியார்க்கு அளி செய்க வென்றது.

(இ-ள்.) அறுசுவை மிக்க கனிகளைச் சிவனடியார்க்கு மகிழ்ந்தளித்திடாமல் தமது குடும்பத்தார்க்கும், உறவினர்க்கும் அளித்து உபசரித்து மிகிழும் அன்பானது ஆவின் பாலுண்ணுவோரைக் கடிந்து அந்நிறமே படைத்த கள்ளினைக் கருதுவோராகவே அமையுமென்பதாம்.

இதனான் யாவருங்கேளிரெனினும், சிவனடியார்க்கே முதன்மையுற அளித்திடுக என்றார்.

**கொடைச் சால்பு**

அறலருஞ் சுரபிக் கீயு
மமுதமே உளிக்கு மகீரம்
விறலர வினுக்கு நல்கில்
விடமுத விடுமா போல

விறையடி யவர்க்கே தேனு
மீந்தவர் முத்தி சேர்வார்
கறையவற் கினிய தீந்துங்
கடுநரகடைவ ரன்றே. (55)

(எ-ன்.) கொடைத் தகுதியுணர்த்தினார்.

(இ-ள்.) அருமை மிக்க பசு அளித்திடும் பாலமுதம் மானுடத்திற்கு மதிப்பு மிக்கது. ஆயின் அதே பாலினை கொடிய பாம்பினுக்கு அளித்தால் அதுவே நஞ்சாகிப் போகும். அதுபோல சிவனடியார்க்களிக்கப்படும் கொடையால் கொடுத்தவர் முத்திப்பேறடைவர். அன்றி தீயோர்க்கு இனியன பல ஈந்தாலும் அவர் கடுமையான நரகமே அடைவரென்பதாம்.

இதனான் அளிக்கப்படும் பொருள் அருமை கூடிய ஒன்றேயாயினும் சிவனடியார்க்கு அளிக்கப்பட்டது அமுதமென முத்தி ஈந்தும், தீயோர்க்கீயப்பட்டது. நஞ்செ நரகமீந்தும் அமையும் என்றார். ஆதலின்,

" ***உதவி வரைத்தன் றுதவி யுதவி***
***செயப்பட்டார் சால்பின் வரைத்து***"
-என்ற குறள் விளக்கம் பெற்றதறிக

**திருநீற்றுப்பெருமை**

சத்திரு சரணஞ் சாகரத்
தடலை வேகரச் சீவன்
சுத்தமாம் பரமானந்தத்
தோயவா ருதியின் மூழ்கு
மத்த மெய்ஞானத் தீயா
வரும்பசு மலநீ றாக்கி
தித்தநீ றணிவோ ருண்மை
நீறிடுந் தொண்ட ராமே. (56)

(எ-ன்.) திருநீற்றுப் பெருமை யுணர்த்திற்று.

*(இ-ள்.)* சத்தாகிய சிவனாரின் இருதிருவடிகளையும் சரணமாக் கொண்டே பிறவிநோயில் மலபரிபாகத்தினைச் சதசத்தாகிய ஆன்மாக்கள் அடைந்து பின் சுத்த வெளியில் பரமானந்தப் பேரின்பப் பெருவெள்ளத்தில் மூழ்கி மகிழும். அம்மல பரிபாகத்தில் மும்மலங்களையும் நீறாக்குந் தகுதியில் நாளும் முழுநீறணியும் பசுவாகிய தொண்டரே விளக்கமாவர். அவரணியும் நீறே அம்மலங்களை நீறாக்கும் வன்மைத் தாம் என்றவாறு.

இதனான் நீறணிக! மலங்களைக ! வென்றார்.

**பவம் புகார்**

நீறுகோ மயம தாகா
நெய்யிருங் கீர மாகா
சாறுகோ தாக மீண்டுந்
தண்டுலம் நெல்ல தாகாக்
கூறுதாம் பிரம்பொன் னாகிற்
குலவுமுற் செம்ப தாகா
வாறுபோ லாசான் பாத
மருவுவோர் பவம் புகாரே. (57)

(எ-ன்.) குருவருள் பெற்றோரின் பேறுணர்த்திற்று.

*(இ-ள்.)* தீயினாற் சுடப்பட்டு நீறாகிய சாம்பல் மீண்டும் கோமயத்துடனாய ஆப்பி யாகா. அதுபோன்றே நெய்யானது ஈரமாகா. கருப்பஞ்சாறும் மீண்டும் கரும்பாவது இல்லை. உமியும் நெல்லாவதில்லை. தாமிரம் பொன்னாகிய பிறகு மீண்டும் செம்பாவது இல்லை. அவ்வண்ணமே குருவின் திருவடிகளையே புகலாக்கொண்டோர் பாவச்செயல் புரிந்து பாவிகளாவதில்லை என்றவாறு.

இதனான் குருவருள் கூடியவன் குற்றவனாக வாழ்ந்திருப்பினும் நன்னிலையே அடைவன் என்பதுணர்த்தினார்.

### குருபதம்

மேருவி லிருந்து வேறு
வெறுக்கைதே டிடுவார் போலும்
நார மும்நீ ருண்ண
நாவறண் டயர்வார் போலும்
சீரிய லிங்க மங்கத்
திருக்கமுத் தியினைத் தேடி
பாரிடை யுழலு மாந்தர்
குருபதம் பற்றி லாரே. *(58)*

(எ-ன்.) குருபதப் பேறுணர்த்திற்று.

*(இ-ள்.)* மேருமலையின் உச்சியிலிருந்து கொண்டு அதற்கு மேலான செல்வம் தேடுவார் போன்றும் நல்ல நாரந்தம் நாறும் நீருண்ண இருக்க, நாவறண்டு அயாவுயிர்ப்பர் போலும் அரிய இலிங்கம் அங்கத்திலேயே இருக்கின்றபோது முத்தியினைத் தேடித் தேடி இவ்வுலகில் உழலும் மாந்தர் குருவின் தாள்களின் மேற்பற்றில்லாதவர்களேயாவர் என்பதாம்.

ஆதலின் எல்லாம் அவனருள் என்றிருத்தலே ஆக்க அருமருந்தாம்.

### துரோகர்

குரவரை மனித ராகக்
குறிப்பவர் குருத்து ரோகர்ப்
பிறறொன்றை வணங்கு வோர்கள்
பொருவில் சங்கம வேட

.... ... ... ... ... ... ... ... ... ... ...

*புனைந்ததி நெறிநில் லாமல்*
*வருமவத் தொழில்கள் செய்யு*
*மவர்கள்சங் கமத் துரோகர்.* (59)

(எ-ன்.) வீரசைவத்தின் துரோகியர் இவரென்றது.

*(இ-ள்.) சமயக்குறவர்களையும் தம்முள்ளொருவராக மனிதரெனவே குறித்து ஒழுகுபவர் குருத்துரோகர் எனப்படுவர். பிற தெய்வங்களை வணங்குவோர்கள் இணையற்ற சங்கம வேடத்தில் இருப்பினும் துரோகரே அவ்வேடம் பூண்டும் அந்நெறி பயிற்றாது அவத்தொழில்கள் செய்யுமவர்கள் சங்கமத் துரோகர் ஆவர் என்றவாறு.*

இதனான் வீரசைவத்தின் அகமும் புறமும் விளங்கும் துரோகியருள் அகத்துரோகியரின் வகைமையினை விளக்கலானார்.

**மேவிய பணி**

*அடுத்ததின் றன்மை யான்மா*
*வாகுமென் றறிந்த நல்லோர்*
*நடித்திடுஞ் சமய வர்தம்*
*நத்தவஞ் செபந் தியானம்*
*படித்துல கியற்கை யாவும்*
*பரகதி விலக்கா மென்றே*
*விடுத்தருட் குரவன் பாதம்*
*மேவிய பணி செய்வோரே.* (60)

(எ-ன்.) சமயப்பணி உரைக்கலாயிற்று.

(இ-ள்.) பிறிதொரு பொருளின் இயல்பும் ஆன்மாவினாலே அமைகிறதென்பதனை உணர்ந்த சான்றோர்கள், போலித்தனமாகப் புறவுலகில் தவஞ் செய்வோராயும், செபஞ்செய்வோராயும், தியானஞ்

செய்வோராயும் நடித்திடும் அப்புல்லர்களின் வழியினைக் கடைப்பிடியாமல் அதனை பரகதி விலக்கெனத் தள்ளி, அருள்புரியும் கருணை வள்ளலாம் குரவனது திருவடி சார்ந்து அவருரைத்தாங்கு ஆன்மப்பணி புரிவோராவர் என்றவாறு.

இதனான் உயிர்கட்குப் புரியும் பணியே வீரசைவத்தாரின் முதற்பணியாகும் என உணர்த்தினார். பிற புற வேடச்செயல்களைக் கடித்தார்.

**குருவருள்**

இருவினைப் பயனாஞ் செய்தி
யாமறிந் தருந்த மாட்டோ
மிருவினை யறிந்து கூடா
விறையறிந் தருந்து மென்றே
திருகு நம்போத மான
சித்தாந்த மகன்று ஞானக்
குருபர னருள்பெற் றோர்கள்
குருனெறி குறுகி டாரே. *(61)*

(எ-ன்.) இருவினை சேரா குருவருள் நிலை கூறிற்று.

*(இ-ள்.)* நல்வினை, தீவினை ஆகிய இருவினைகளும் அவற்றானாய பயன்களும் அறிந்தோர் அவற்றைக் கூடார். அன்றி இறைமையினையுணர்ந்து நெஞ்சங்கொண்டு இன்புறுவர். மனத்தினை மயங்கச் செய்யும் சைவசித்தாந்தம் எனப்படும் போதம் அந்நிலையில் அகன்று ஞானமே வடிவாக விளங்கும் குருபரனின் அருள் பெற்றோர்கள் தவறான மார்க்கங்களை அடையார் என்றவாறு.

இதனான் இருவினை நீக்க வேண்டலும் சைவசித்தாந்த

மயக்கமும், குருவருள் பெருமையும் உணர்த்தினார்.

### குருநோக்கு

பருவரை யனேக மென்னக்
குவித்துமண் பரவை யேழுந்
தருபுன லனைத்துங் கொண்டு
சவுசமுற் றிடினு மேனைக்
கருமல மகலா தென்றுங்
கருணையால் நம்போல் வந்த
குருவருட் பார்வை யாலே
மலமெலாங் குலைந்து போமே. *(62)*

(எ-ன்.) குருவருட் பார்வையின் குணமுணர்த்திற்று.

*(இ-ள்.)* மிகப்பெரும் மலையன்ன குவித்து வைக்கப் பட்ட அநேக மண்வரைகளும் எழுகடல் நீர் முழுமையுங் கொண்டு சவுசம் நிறைப்பினும் நீக்கற்கரிய மலங்கள் அகலா. ஆனால் கருணை மிக்க குருவருள் சிந்தித்து, அவர்தம் திருநோக்கு அமைந்தால் மலமனைத்தும் நீங்கி நல்லருள் கிடைக்கும் என்றவாறு.

இதனான் சவுசமியற்றலைக் காட்டிலும் அருளும் ஆற்றலும் மிக்கது குருவருளே எனக்குறித்தார்.

### ஞானங்கள்

சலமெனு ஞானத் தானே
தருமலி மலர்மதி நீங்கும்
நிலவு மந்திர ஞானந்
தானிகழ் சதாசத்தி யுண்டாம்
பலமுறும் பரம ஞானம்
பாவங்க ளனைத்தும் போகும்
முலவு மெஞ்ஞானந் தானே
முயர்தரு முத்தி நல்கும். *(64)*

(எ-ன்.) பல்வகை ஞானங்களின் பயனுரைத்தது.

(இ-ள்.) சலம் என்ற ஞானம் மிகுந்த மலர்மதி நீக்கும் உலகில் நிலவுகின்ற மந்திர ஞானம் சதாசத்தியினை அருளத்தக்கதாகும். வன்மை மிக்க பரமஞானம் பாவங்கள் அனைத்தையும் நீக்கவல்லதாகும். ஆனால் நிலவுலகில் வழங்கும் மெய்ஞானம் உயர்ந்த முத்தியினை நல்குத் தகுதி வாய்ந்ததாகும்.

இதனால் சிவஞானங்களின் முன்வகைப் பயன்கள் கூறினார்.

**சீடர் வண்ணம்**

சீடநற் குணந் தேர்ந்த
சிந்தைகூ ரந்த ணர்க்கு
நாடிய வருட மூன்றில்
நரபதிக் கோரா றாண்டிற்
மாடுறு வணிகர்க் கொன்பான்
வருடத்திற் சூத்தி ரற்குப்
பீடுறு மீரா றாண்டில்
பின்னுப தேசஞ் செய்வான். (64)

(எ-ன்.) மாணாக்கர் வண்ணமும் அவர்க்கான உபதேச கால அளவும் உணர்த்திற்று.

(இ-ள்.) சீடராகத் தெரிந்துணர்ந்து அவர்க்கு சைவ மறைதமை குருவானவர் உணர்த்த வேண்டிய கால அளவையாவது,

அந்தண வருணத்தினைச் சார்ந்த சீடருக்கு ஆண்டுகள் மூன்றினில் உபதேசமுணர்த்தலாம்.

அரச வருணத்தரான சீடருக்கு ஆறு ஆண்டுகள் உபதேச காலமாகும்.

வணிக வருணத்த சீடருக்கு ஒன்பது ஆண்டுகளில் இவ்வுபதேசம் நிகழலாம்.

சூத்திர வருணத்தர் சீடராயின் அவர்க்குப் பன்னிரு ஆண்டுகள் உபதேசமுணர்த்தல் வேண்டும் என்பது.

இதனான் நால்வகை வருணத்தாரும் சிவமறை கேட்கலாம், வீரசைவநெறி புகலாம், குருவருள் பெறலாம் என்பதுணர்த்தினார்.

"சிந்தை கூர் அந்தணர் என்றார்" அவர்தம் கருப்பூர புத்தி நோக்கி

"நரபதி" என்றார் அரசர்தம் தலைமை ஓங்க.

"மாடுறு வணிகர்" என்றார் அரைசுவிழை திருவினர் அவரேயாதலின்.

சூத்திரரின் கடைமை தோன்ற அடையின்றி கூறினர். ஆண்டுகளில் பெருக்கமும் உணர்த்தினார்.

**கழித்துக் காணல்**

தூரிதங் கனற்விழிச் சோதி
தொட்டும் புடவி தனிலுத(ய)
மரிய புவியிலரித் தெடுத்த
அம்பொன்று யரிந்தனங் கடைய
வீருவெங் கனலிங் கிவைபோல
மாறாக் கரும மலமாயைக்
கருவி யகன்ற விடத்துயிரைக்
காணுங் குரவன ருளாலே. (65)

(எ-ன்.) குரவனருட் பெருமையுணர்த்திற்று.

(இ-ள்.) குரவனது பேரருள் பெற்றவிடத்து உயிரை மயக்கி வருத்தும் பல மாயைகளில் கருவிய வாறகன்றிட அவ்வுயிர்க்கு இறையொளி வாய்த்து தூய்மையுறும், அத்தூய்மையொளியானது உலகமுவப்ப வலனேர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு எழுதருமொளி வெள்ளமெனவும், புவியிடைப் பிறந்த மாசறு பொன்னாயும்

அதனொளி போன்றும், தீக்கடைக்கோலினின்றும் எழுப்பப் பெற்ற தூய்மையான நெருப்பொளி போன்றும் விளங்குவதாகும் என்றார்.

இதனான் குருவருள் பெற்ற உயிரினியல்பினை முப்பெரும் ஒளிகளொடடுக்கி ஒப்பிட்டு உணர்த்துகின்றார்.

**குரு புத்திரன்**

அவமுந்தியப் பொய்யப்பவ மகற்றும்
ஆசான் திருனாத் தாண்டாருத
தவமுந்திய பதுகுவ வுயிரினது
தகை யாரசெவி யொனியதாகும்
நவமுந் தியமு மலமகற்று
ஞான விதையஞ் செழுத்தாகுஞ்
சிவமந் திரத்தா லுற்பவித்த
சீடன் குருபுத் திரனாமே. (66)

(எ-ன்.) குருவருள் பெற்ற சீடனது மலபரிபாகம் உணர்த்திற்று.

(இ-ள்.) அவத்திற்கும் முந்திய பொய்ப்பவங்களை அகற்றவல்லது ஆசானின் திருவாய் மொழியேயாம். தவப் பேற்றால் பக்குவமுற்றுக் கேள்விச் செல்வம் பெற்றமையே பேறாகும். ஒன்பான் வாயில்களும் அவற்றாலாய மூன்று மலங்களையும் அடக்கி ஒடுக்கும் ஞானவிதை ஐந்தெழுத்து மந்திரமாகும். அச்சிவமந்திரத்தாற் தோற்றம் பெற்ற சீடனே குருபுத்திரனாவன் என்றவாறு.

இதனான் குருபுத்திரனது தோற்ற உண்மை கூறினார். கருவாக அமைந்தமை முதலா ஐந்தெழுத்து மந்திரத்தை ஓர்ந்து வளர்தலின் அக்குழந்தை குருபுத்திரனாகவே அமைவது வெள்ளிடை.

நாராயண மந்திரத்தை நாரதருரைத்த அளவில் தாயின் கருவிலுற்ற கரு ஓர்ந்துணர்ந்து, பிரகலாதன் என்ற நாரண பக்தனாகத் தோற்றம் பெற்றமை நற்சான்றாகும்.

## இருநெறி

நர்த்தனார் பொற்பத மருவும்
நெறிதா னவைக ளிரண்டாகும்
பத்தி மார்க்கம் விதிமார்க்க
மெனவே பகரப் படுமவற்றுள்
பத்தி மார்க்க மெய்முத்தி
பக்கு வருக்கே யுளவாகு
மித்தை நீடும் அபக்குவதற்கே
விரவும் விதிமார்க் கமதாமே. (67)

(எ-ன்.) பத்தி, விதி மார்க்கங்களின் விளக்கம் கூறிற்று.

(இ-ள்.) ஆனந்தக் கூத்தனாரின் திருமலரடிகளை அணைவதற்குரிய சாதனமாகும் நெறிகள்தாம் இருவகைப் படும். ஒன்று பத்தி மார்க்கம், பிறிதொன்று விதி மார்க்கம் என்று கூறப்படும். அந்நெறிகளுள் முதலாகும் பத்தி மார்க்கம் பக்குவமுற்ற சீலர்கட்கே மெய்மூர்த்தி விளைக்கத்தக்கது. ஏனையோர்க்குப் பொருந்துவது விதி மார்க்கமேயாகும்.

இதனான் பத்தி மார்க்கம் முயற்சி எனும் திருவினையுடையார்க்கும் விதிமார்க்கம் ஏனையோர்க்கும் உரியதென்றார். ஆதலின் முயற்சியால் விளையும் திருவாகப் பத்திமார்க்கமும் அல்லாமல் அமைவது விதிமார்க்கமும் என அமையும் என்பது உணர்த்தப்பட்டது.

### சங்கம பத்தி

சாற்று மிதினிலல குறைந்த
சமயத் தவற்காம் விதிமார்க்கம்
யேற்ற மிகுஞ்சங் கமசீலற்
கிசையு மதுபத் தியின்மார்க்க
மாற்று மிவைபொற் குடம்புடவிக்
குடம்போல் மூலத் தமாகாப்
போற்று மருங்கற் பவையாகும்
போது மாதரை(யும்) நிகராமே. (68)

(எ-ன்.) சங்கபத்தியின் விளக்கம் நுதலிற்றாம்.

*(இ- ள்.)* கூறப்பட்ட இவ்விரு நெறியன்றி பிறிதொரு நெறியில்லை. இவற்றுள் குறைபாடுடைய சமயத்தார்க்கு அமைவதே விதிமார்க்கமாகும். பக்தியின் மார்க்கமோ பெருமை மிகுந்த சங்கமலிங்க வழிபாட்டன்பர்க்கே பொருந்துஞ் சிறப்பு வாய்ந்தது. அந்நிலையே மட்குடம் பொற்குடமாயும், கருங்கற்களே அருமணிகளாயும், போதுக்களே அழகிய மாதரெனவும் திகழுந் தரத்தினை யொத்ததாகும்.

இதனான் சங்கம பக்திமார்க்கம் ஒன்றே எளியதையும் மதிப்பில் பெரிதாக ஆக்கிக்காட்டும் போராண்மை மிக்கதென்றார்.

**சிவ மார்க்கம்**

உள்ளன் பதனாற் குருலிங்க
வேடம் பொருளென் றுண்மையுடன்
கொள்ளு மவர்க ளனைவருக்குங்
கூடும் பத்தி மார்க்கநிலை
விள்ளு மறைநூல் முதலான
விதிமார்க் கத்தின் பொருந்திமனந்
தெள்ளு சிவபத் தியின்மார்க்க
மில்லார் கதியிற் செல்லாரே. (69)

(எ-ன்.) சிவபத்தியின் மார்க்க நிலை உணர்த்திற்று.

*(இ-ள்.)* உள்ளன்பினாற் குருலிங்க வேடமே உண்மைப் பொருளென்று மனத்தகத்தே கொண்ட சான்றோர்க்கே பக்திமார்க்க நிலை கூடுவதாகும். மறைநூல்கள் கிளந்திடும் விதி மார்க்கத்திலாயினும் மனமானது பொருந்திட சிவபத்தியின் கண் செலவில்லார் நற்கதி செல்லார் என்றவாறு.

இதனான் பக்திமார்க்க மின்றேனும் விதிமார்க்க வழியாயினும் சிவபக்தி சேர்க! என்றார்.

## மெய்ப்பத்தி

கமலஞ் செரிந்த வயற்குன்றை
கருதும் விறல்முண் டருமூல
மலங் கடந்த விறலுடைய
ஞான காரர்ம லாயுதருஞ்
சிமையந் திருமா துடனாகத்
திருந்தா நீரி லிருந்தாடும்
விமலன் புறமென் றுரைத் ததுவும்
மெய்ப்பத் தியாகும்விதி யன்றே. (70)

(எ-ன்.) மெய்ப்பத்தியாகும் விதியுரைத்தது.

(இ-ள்.) கமல மலர்கள் செறிந்த வயற்பரப்புக்களால் ஆயநெற்குன்றத்தினையே கருத்துள் கொண்டோரும் அருவிறற்சான்ற மூலமலங்களையுங் கடந்து ஆன்ற ஞானகாரராகலாம். இமையத்தின் சிமையத்தில் உமையொரு பாகராக வீற்றிருக்கும் எம்பெருமானின் குற்றமற்ற தோற்றத்தினைப் புறமென்றுரைப்பது மெய்ப்பத்தியி னாலேயாம் அன்றி விதிமார்க்கத்தாலன்றென்க.

இதனான் மெய்ப்பத்தி மார்க்க முழுமை உரைத்தார், செவ்வி கருதி, திருந்தா நீர் என்றார், பனிக்கட்டி நீராகத் திரியாமையினான்.

## மெய்ப்பத்தி அதிசயம்

பேத மகலு மேகாந்த
... ... ...தேவருடன் மண
வாது பகர்த்தமது சிர
மரிந்து வலியக் கரத்தேந்திப்
போத மறவே யிரவுபகல்
புகலே ழதில்சங் கிலியான
வீதி வலங்கொண் டதிசயமு
மெய்ப்பத் தியாகும் விதியன்றே. (71)

(எ-ன்.) மெய்ப்பத்தியி னானாய வெற்றி விளக்கிற்று.

*(இ-ள்.)* மெய்ப்பத்தி நெறியொன்றினாலேயே மனோ வாக்கால் விளைந்திடும் பேதங்கள் அகன்றிடும். தனிப்பேரின்பத்துடன் தேவருடனும் வாதுரைத்து புறச்சமயிகளைத் தோற்கடித்து அவர்தம் தலைகளைக் கொய்து ஆற்றல் சான்ற தமது கைகளிலேந்தி உற்ற போதமற இரவு பகலாக தொடர்ந்த வீதிகளில் வெற்றியுலா வருகின்ற பேரதிசயத்தினையும் மெய்ப்பத்தியே தருகின்றது. விதி மார்க்கமன்று என்றது.

## தன்னை வேட்டல்

கோட்ட மிட்டவை மணமாயக்
குழபந் தனிற்சே டர்தாசர்
யிட்ட மிதச்சுடர் படிகலிங்க
மெடுத்துக் காட்டி யதுந்
திட்ட முற்ற வங்கியர் தாஞ்
சிவனா ரெதிரே தஞ்சிரத்தை
வெட்ட வெட்டங் குரித்ததுவும்
மெய்பத் தியாகும் விதியன்றோ. *(72)*

(எ-ன்.) தன்னை வேட்டலுந் தருமென்றது.

*(இ-ள்.)* உலக வாழ்வினமைவால், பல மாயைகளால் கோட்டமுற்ற தம்மனச் சிறுமையகல. அமுதவொளி போலும் பால் நிறக்கற்றையொளி மிக்க படிக லிங்கத்திற்கு முன்னாள் கருப்பூர ஒளி ஏற்றிடப் பெறும் பொன்னொளி போல் சிவனார்க்கெதிரே தம் தலையினைத் தாமே அரிந்து, பலியிடலும், அரிந்திட மனங்கொள்வதுமான வீரம் மெய்ப்பத்தியினாலேயே விளைந்திடுவதாகும் என்றார்.

இதனான் தன்னை வேட்டலும் தரும். வீரசைவத்திற்கே என்பதுணர்த்தினார். வெற்றி வேண்டி கொற்றவைக்கும் பூதத்திற்கும் தம்மை வேட்ட தமிழ் மாந்தரின் வீரத்தினை

சிலம்பு, கலிங்கத்துப்பரணி போன்ற இலக்கியங்கள் செப்பும்.

தன்னை வேட்டலின் பெருமையினைச் சைவத்துள் போற்றியே "கண்ணப்பனொப்பதோர் அன்பின்மை" என்றனர்.

"நாளாறிற் கண்ணிடந்து அப்பவல்லேனல்லேன்" எனவுஞ் சான்றோருரைத்தனர்.

## மெய்த்தேவின் ஆற்றல்

காள மிடந்தா நிகாரஞ்
சங்கா தாசையா சீதரனை
மாள முருக்கிப் பொடிசெய்து
வயமு மழுவால் மாச்சயர
நீளும் புகழ்குன ரைப்பிரமா
நெடுவா னடைய நந்தியுடன்
மீள வழைத்த பெருந்திறலும்
மெய்ப்பத் தியாகும் விதியன்றோ. (73)

(எ-ன்.) மெய்பத்தியினாலாம் பேறுணர்த்திற்று.

(இ-ள்.) திருமகள் கேள்வனைப் பொருது பொடியாக்கிய ஆற்றலும், மறைந்தொழிந்த பிரமனை நந்தியுடன் மீள அழைத்த பெற்றியும் மெய்ப்பத்தியினாலேயே விளைந்ததன்றி விதியினானன்று என்பது.

இதனான் மெய்ப்பத்தியினான் தெய்வங்களையும் வெல்லாகுந் திறமுணர்த்தினார்.

## இறைவனை அழைப்பது

மாது பாகர் தமைக்கலியா
வருக நம்முற கென்றழைப்பத்

தீதிலா நீயெம் முறகுவரு
 கென் றழைப்பச் சென்றெதுவும்
ஓதுக நீதிக ளலயருயா
 வேதியிற் கன்றொரு சுணங்கால்
வேத மொன்று நலித்ததுவும்
 மெய்பத் தியாகும் விதியன்றோ. (74)

(எ-ன்.) சிவனாரையும் ஏவல்கொள்ளும் செவ்விய நெறி மெய்ப்பத்தியே என்றது.

*(இ-ள்.)* மாதொரு பாகனாரை, கலியா என விளித்து, வருக! நம்முடன் இருக்க என அழைப்பப் பெருந்தெய்வமாம் சிவனாரும் சென்றிருப்பதும், ஓதப்படும் நீதிகளாலுயர்வுற்ற வேதியற்கு அருமறையொன்றினையருளியதும் மெய்ப் பத்திலேயன்றி விதியன்றென்க.

**இறையெளிமை**

தண்டயிற் சரிகைச் சவுணடைய
 பாத மதுநா லுகந்தளிப்ப
புடையற் றயினி பிடிபிடியாய்
 புனிதர் வாங்கிய ருந்தியதும்
அடலிற் பெரிய முதுசுண்டி
 சவுண ரழைப்ப முன்னிறந்த
விடையுகக் குரத்தோ டெழுந்ததுவும்
 மெய்ப்பத் தியாகும் விதியன்றே. (75)

(எ-ன்.) இறைவனின் எளிவந்த கருணை மெய்ப்பத்தி யினாலேயே யாகுமென்றது.

*(இ-ள்.)* அயர்வினாலுறக்கங்கொண்ட அன்பர்க்கன்று திருவடி தீக்கை நல்கி மகிழ்ந்ததும். அன்பினால் அன்று பிடிப்பிடியாக பிட்டினை வாங்கியுண்டதும், ஆற்றல் மிக்க காரைக்காலம்மைக்கு இடபவாகன மாதொருபாகனராகக் காட்சியளித்தருளியதும் மெய்பத்தியினாலேயன்றி விதி யாலன்றென்க.

**பதமலி பெருமை**

அடுத்த புகட்செரி யறபகையா
　　ரிவைதனை யன்று ளித்ததுவும்
தடுத்த முனியுந் தந்தைபதந்
　　தண்டி னவியாற் றடிந்தமையும்
தொடுத்த மிடபா வலனூரன்
　　தோகையா லண்ண லைத்தூது
விடுத்தவ மிழைத் திரந்தானும்
　　மெய்ப்பத் தியாகும் விதியன்றே.　　(76)

(எ-ன்.) இதுவுமது.

(இ-ள்.) இயற்கைக்குப் பகையாய் அறம் செய்த திருத்தொண்டர் தம் பகைதனைக் களைந்து தம் மனைவியைத் தாமே சிவனடியார்க்கு அருளிச்செய்ததும், சிவபூசையினைத் தடுத்தத் தந்தையாரின் காலைக் கோலையே மழுவென வீசித் தடித்த சண்டேசரின் பேரன்பும், நாவலூரன் பரவையார் பால் தூதேகப் பணித்த நிலைக் குற்றுப் பணிபுரிந்த இறைவனும் மெய்ப்பத்தியில் விளைவிற்கான சான்றுகளாகும். அன்றி விதிமார்க்கத்திற்கன்று என்க.

**தொண்டர் பெருமை**

நீல நக்கர் திருமனைவி
　　நிமலர் மீரிற் றுமிந்தமையுஞ்
சீல முற்ற சிறுத்தொண்டர்
　　திருத்த மகவை யறுத்ததுவும்
மாய மகற்று மதிபந்தர்
　　மதிசேகரற்கு முதற்படுமீன்
வேலை விட்டன் புறுகியதும்
　　மெய்ப்பத் தியாகும் விதியன்றே.　　(77)

(எ-ன்.) மெய்ப்பத்தி புரிந்து மேன்மையுற்ற சிவத்தொண்டர் தம் பெருமை புகன்றது.

*(இ-ள்.) இளமை துறந்து மனைவியுடனுறவு துறந்து திருநீலகண்டமாய் வாழ்ந்த அடியவர் வாழ்க்கையும், சிவனடியாரின் விருப்பத்திற்கிசைந்து தம்மொரே மகனையும் வாளாலரிந்து அமுது படைத்த சிறுத்தொண்ட நாயனாரும், கொண்டிடும் மீன்களில் முதல் மீனைப் பிறையணி கடவுட்குக் கடலில் காணிக்கையாக்கி மகிழ்ந்த அதிபத்தரும் மெய்ப்பத்தி மார்க்கத்தின் விளைவுகளேயன்றி விதி மார்க்கத்தரல்லர் என்றவாறு.*

திருத்தொண்டத்தொகை முறையே திருவாரூரைக் குறித்த பாடற்பின் திருநீலகண்டரை முன்னிட்டுப் பாடுகிறார்.

**அன்பகம்**

*அய்ய மறவே யிறைவருக்குக்*
*கலிக ணண்தானம் அன்பினுடன்*
*செய்யத் தகமை சிவலிங்கந்*
*திருத்த முடனே தரித்ததுவும்*
*தைய்ய லருள்சேர் வைசவ்வை*
*தன்னைக் கணவன் முனிந்தடிக்க*
*வெய்ய சமணற் கானதுவும்*
*மெய்யப்பத் தியாகும் விதியன்றே. (78)*

(எ-ன்.) பெரு வீரபத்தி நெறியாமாறு விளக்க உதாரணங் காட்டிற்று.

*(இ-ள்.) மனத்துக்கண் மாசற இறைவற்குத் தங்கண்ணிடந்து அப்ப, அதனை அச்சிவலிங்கமுமேற்றிட்ட அன்பின் திருவுருவும், பெண்ணில்லார்க்குப் பேரருள் புரிந்திட்ட நிலைகண்டு அவர் கணவன் அவரைப் பின்பற்றிட கொடிய சமணர்கள் காடுற்றழியவும் பேரருள் புரிந்தது மெய்ப்பத்தி நெறியேயாகும்.*

## தோற்றுந் திதி

புரைதீர் புகலிச் சம்பந்தர்
புகழ்னா வரைய னாரூர
னிரையின் னெறிவெண் பொடியாகும்
நீல விழியைப் படைப்பையினில்
அரவா லிறந்த வளைக்காண
ணமுத மகவை யக்கணமே
விரைய வருகென் றழைத்ததுவும்
மெய்ப்பத் தியாகும் விதியன்றே. *(79)*

(எ-ன்.) இதுவுமது.

*(இ-ள்.)* திருவெண்ணீற்றுப் பெருமையினை உலகறியச் செய்த குற்றமற்ற காழிப்பிள்ளையார், நாவுக்கரசர், ஆரூரனார் இவர்களும் இவர்களால் உயிர்பெற்ற பூம்பாவை, திருமருகலில் அரவு தீண்ட அருமனைவியிலனைத் துறந்திறந்த செட்டி மகனை உலகோர் காணப்பதிகம் பாடி உயிர் பிழைத்தழைத்த பேரறம் மெய்ப்பத்தியில் விளைவேயன்றி விதி மார்க்க விளைவல்ல.

## சிவனருள்

கன்னிபாக ரரும்புற கைக்
காதல் பெருகு மாதரவாய்ச்
சென்னெல் லோடன் றருந்தியதுஞ்
சிலையா லெறிந்த சர்க்கியரு
மண்ணு ... ... ழை யரிற் பேச்ச
மாதே வியாரெம் பெருமானுக்
கன்னையா யினதும் பிறவும் (மெய்ப்)
பத்தி யாமென் றறிவீரே. *(80)*

(எ-ன்.) அன்பிற்கெளிவரும் சிவனாரருள் கூறிற்று.

*(இ-ள்.)* மாதொருபாகனாராகிய சிவனார் அரிவாட்டாய நாயனார் அரிதிற் படைத்த செந்நெல்லமுதிளை

உண்டருளியதும், கல்லெறிந்து வழிபட்ட சாக்கியருக் கருளியதும், கற்பின் பெருவிளக்காம் காரைக்காலம்மையார் தம்மை தமக்கே அம்மையாகக் கொண்டதுவும் மெய்ப்பத்தியின் விளைவெனவே கூறிடுக.

## விதியில் விதி

எழுவா ருதியிற் பாற்கடலி
லிலங்கு மணலைத் தொகைசெயினும்
வழுவாக் குருபத் தியின்மார்க்கம்
மருவிப் பரவை யடைந்தோற்கு
மெழுமா தரவாற் பெறுவோர்க்கு
மெண்ணின் றாகும் விதிமார்க்கம்
பழுதாஞ் ... ...... ..... வார்தம்
பலனா தவன்முன் வதையாமே. *(81)*

(எ-ன்.) விதிமார்க்கம் இத்தனை என்றற்கியலா மையினை உணர்த்திற்று.

*(இ-ள்.)* எழுகடல், திருப்பாற்கடல் இவற்றில் உற்ற மணற்றுகளை வேண்டுமெனின் எண்ணிடலாம். ஆயின் விதி மார்க்கத்தினை அளவிட்டுரைக்க முடியாது. அந்நெறி படர்வோர் செந்நெறியறியாது மயங்கி மாள்வர். ஆனால் குருபத்தி மார்க்கமோ வழுவற்றது. பரன்பாற் சேர்க்கவல்லது என்றது.

இதனான் விதிமார்க்கத்தின் தரமின்மை உணர்த்தி குருபத்தி மார்க்க நெறி புகட்டினார்.

### சங்கம ஒருமை

காலம் விரும்பார் தொழில்விரும்பார்
சித்த விகாரத் திருக்கறியார்
கோலம் விரும்பார் ... ... ... ...
கொள்கை விரும்பார் குருபத்திப்

பாலின் புறுசங் கமலிங்கப்
பத்தி மார்க்கத் தவர்தாமே. (82)

(எ-ன்.) பத்தி மார்க்கத்தாரின் மனவொருமை யுணர்த்திற்று.

*(இ-ள்.)* சங்கமலிங்கப் பத்திமார்க்கத்தவர்தாம் காலத்தை வேண்டார். தொழில் விரும்பார், அவர்தாம் மனவிகாரங்கட்கு அப்பாற்பட்டவராவர். புறக்கோலம் பூணார். தமக்கென வேறெத்தகைய கொள்கையினையும் விரும்பார். குருபத்தியின் நாட்டமொன்றே கொள்வர் என்பதாம்.

இதனான் சங்கமலிங்கப் பத்தி கொள்வர் தம் மனவொருமை யுணர்த்தினார்.

**பதர் வழி**

விள்ளுங் குருபத் தியின்மார்க்கம்
விரும்பார் விதிநூல் நெறற்பிதற்றி
யெள்ளும் பருக வாதியாவந்
தெய்தி யிடினு மமுதரிவோ
ருள்ளு மவையும் கொள்ளாமல்
லொருவப் படுவரு மாதியெல்லாந்
தள்ளி யொருநற் பதர்புகினும்
தரியாதகற்றப் படுமாறே. (83)

(எ-ன்.) குருபத்தி நெறி நில்லார் இயல்பு கூறிற்று.

*(இ-ள்.)* கூறப்படும் குருபத்தியின் மார்க்கத்தினை விரும்பாதவர்கள் விதி நூல்கள் பலவற்றின் பலதரப்பட்ட நெறிகளைப் பிதற்றித் திரிவர். சான்றோரால் எள்ளப்படும் பருக்கவாதி என்றாகி ஒன்றிற் பற்றின்றி எல்லா நெறிகளையும் குறைகண்டு விலக்கி உறுநெறியொன்றின்றி வாடுவர். இஃது எல்லாவற்றையும் பதரெனக்கொண்டு அதனுட்செறிந்த நெல்மணிகளையும் நீக்குமறிவிலிச் செய்கையொக்கும்.

## ஆதியும் அந்தமும்

வீறுடந் தகமை சித்தாந்தம்
வேதாந் தத்து வந்தமுடன்
கூறுங்காலந் தம்போ தாந்தங்
குலவுனா தாந்தங் களென்னத்
தேறுஞ் சமயவிதி மார்க்கத்
திருக்கா ருயிரை மயக்கறுத்து
அறிந்தமும் விட்டகன் றிகலா
தமரும் பொருட்சங் கமமாமே. (84)

(எ-ன்.) சங்கம குருபத்தி மார்க்கத்தின் மேன்மை உணர்த்திற்று.

*(இ-ள்.) வீறுபெற்று விளங்கும் சித்தாந்தமானது வேதாந்தத்துடன் விளங்கும்போது, கூறப்படும் காலாந்தம், போதாந்தம், நாதாந்தம் எனப்படும் வகைமைகளாக விளங்கும் சமய விதி மார்க்கத்திருப்பார் தம் உயிர் மயக்கறுத்து மனத்துக்கண் நிலைபெறும் பொருள் சங்கமம் ஆகும் என்பர்.*

*இதனான் சங்கம நெறியே சித்தாந்த, வேதாந்த, காலாந்த, நாதாந்தங்களின் முதலென்றார்.*

## குருலிங்க வேடமே கொள்க

குருலிங்க வேடமே மெய்ப்
பொருளெனக் கொண்டுய் யாமற்
றறிவுறுத்தும் விதிநூல் மார்க்கம்
செப்புதல் கதியென் றோதி
லூரு வந்து மிகுநோயாள
ருவமருந் துட்கொள் ளாமற்
பெருகுவர் கண்டநூ லோதிற்
பிணியகன் றிடுவ ரன்றே. (85)

(எ-ன்.) விதிமார்க்கங் கொள்வார் மயக்கமுரைத்தது.

*(இ-ள்.)* குருலிங்க வேடத்தினை மெய்ப்பொருளெனக் கொண்டுய்தி பெறாமல் அறிவுறுத்தும் விதி நூல் மார்க்கத்தினை மேற்கொண்டு கதியென ஒழுகுவார் உற்ற நோய்க்கு மருந்துண்ணாமல் நோய் பெருகி வருந்துவர் குருபத்தி நூல்களை ஓதியே பிணியகலப் பெறுவர் என்பதாம்.

## முத்தி விரும்புவோர்க்கு

*கத்திய சமைய வாத*
*விதிதருங் கதியை நீக்கி*
*முத்தியை விரும்பு வோர்கள்*
*முகிழ்ந்த மெய்ப் பத்தியாலே*
*மெய்த்தவ மகேசர் பூசை*
*யாவரும் விரும்பிச் செய்வ*
*ரத்தனும் (விரும்பிய) ன்றே*
*யடியரை யரிச்சித் தானே.* *(86)*

(எ-ன்.) முத்தி தருவது மெய்புத்தியே என்றது.

*(இ-ள்.)* ஆகுல நீர வெனவமைந்த வெற்றொலித் தருக்கமா யமைந்த விதிமார்க்கத்தினை நீக்கி, முத்தி வேண்டுவோர் மனத்தாற் கசிந்து கொண்ட மெய்ப்பத்தியினை மேற்கொண்டு மகேச பூசையினை யாவரும் மகிழுமாறு நிகழ்த்திட அதனான் மகிழ்வுறும் அத்தனாரும் அவ்வடியாரைப் போற்றியருள்வான் என்பதாம்.

இதனான் மெய்ப்பத்தி நெறி நின்று மகேசுர பூசை செய்வார்க்கு இறையருள் எளிதில் சுரக்கும் இயல்பு உணர்த்தினார்.

## வீணுரையாடல்

*கதிர்முனிற் குமுதம் போன்றும்*
*கண்கைமுன்... ... ரன்றும்*

மதிமுனிற் கமலம் போன்று
மண்ணைக்கண் டருண்டார் பொன்னும்
விதிமதி வாக நூல்கள்
விரித்துரைப் போரைக் காணிற்
கதிதரும் பத்தி மார்க்க
ரெதிர்மொழி கழறிடாரே. (87)

(எ-ன்.) சமயச் சழக்கருடன் சமவுரை யாடேல் என்றது.

*(இ-ள்.)* பல்வேறுபட்ட விதிமார்க்க மதங்களைச் சார்ந்தோர் தத்தம் மதக்கருத்துக்களின் பெருமைகளை தத்தம் மதநூல்கள் வழி விரித்துரைக்குங்கால் மெய்நெறியாம் பத்திமார்க்கத்தினை மேற்கொண்டு ஒழுகுவார் எதிர்மொழி கழறாமல், சூரியனைக் கண்ட அல்லி போன்றும்,... ... ... நிலவினைக் கண்ட தாமரை போன்றும் மண்ணுண்டார் போன்றும் அமைதி காத்து ஆன்றவிடத்தடங்கிய கொள்கையராய் இருப்பர் என்பதாம்.

**ஞான சூரியன்**

காவுறு கிரிகை தானே
கதியென விதிநூல் காட்டுங்
குரவர்க டமக்கு ஞானக்
குரவற்கு முவகை கூறில்
விரவுமில் லிருளை நீக்கும்
விளக்குமூ வுலக மெல்லாம்
பரவிரு ளணைத்து நீக்கும்
பருதியு நிகர தாமே. (88)

(எ-ன்.) குருபத்தி நெறியே பொருள் விளக்க வல்லதென்றது.

*(இ-ள்.)* நிகழ்த்தப்பெறும் நற்செயல்களே மெய்ப் பொருளை அருள வல்லதென விதி மார்க்க நூல்கள் கூறும். ஆயின் குருபத்தி மார்க்கத்தின் நெறி நிற்பார் கொள்ளும்

ஞானக்குரவர்தம் அருளானது கொடிய இருளையகற்றி மூவுலகினையும் விளக்கப்படுத்தும் சூரியனுக்கு ஒப்பதாகும்.

இதனான் குருவருளே மெய்ப்பொருளை விளக்கிடத் தக்கதென்றார்.

## பேரின்பம்

*குறிதரு லிங்க ணாரும்*
*சங்கமங் குருவென் றேகன்*
*பிறிவதென் னென்னில் மும்மைப்*
*பொருள் மலமுங் கன்மந்*
*துறுவினை யிரண்டு மாயை*
*யுருவமு மகற்றித் தானா*
*யறிவுரு உயிர்கட் கின்ப*
*மளித்திடு நிலைமை யாமே. (89)*

(எ-ன்.) குருவருள் அளித்திடும் பேறுணர்த்திற்று.

*(இ-ள்.)* நன்னெறி கொண்டு இலிங்க, குருபத்தி மேற்கொள்வார் கொண்டொழுகும் குருருளால் மூன்று பொருள் மலங்களும், கன்மத்து உறும் வினைகளிரண்டும் அகன்று, மாய்கையின் தோற்றமும் நீங்கிட அக்குருவருளே அவ்வுயிர்க்குப் பேரின்பந் தந்திடும் நிலைமையதாகும்.

இதனான் குருவருள் மலவினைகளை நீக்குவதோடு பேரின்பத்தினை நல்கவுஞ் செய்கிறது. என்ற பெருமை யுணர்த்தினார்.

## இருள்போக்கி

*மாயையும் வினையு மின்றி*
*மலமிலை யென்னில் மாயை*
*காயமா யறிவு நல்குங்*
*காமிய மின்ப துன்ப*

மாயுயிர்க் கருத்து மூல
　　மாணவ மியற்கை யாகு
போய்வரு மாயைக் கன்ம
　　மொழிந்திடுந் தொடுங்கி டாமே. (90)

(எ-ன்.) குருபத்தி மாயையினை ஒழித்திட வல்லதென்றது.

*(இ-ள்.)* குருபத்தி நெறியானது மாயை வினை இவற்றையன்றி மலங்களையும் களைந்திடத் தக்கதாம். உயிருற்ற உடற்கு அறிவு நல்கிடும் ஆகாயமாய, இன்ப துன்பங்களாய, மூல ஆணவத்தினையும் நீக்கி இயற்கை யாக்கும். சென்று மீளும் மாயை, கன்மங்களை ஒழித்திடும் ஒடுங்கிடமாகவும் அருளும் என்பதாம்.

உயிரினுக் குவமை செம்பாங்
　　களிம்பிருள் மலமென் றோதும்
செயிர்தரு நாற்றங் கன்மஞ்
　　சிவப்பாடல் மாயை யாகு
மயர்வறு மரிசி சூழ்ந்த
　　விடுமி முளையு மாங்கே
மயனரு மலங்கள் மூன்று
　　மனாதியான் மாவுக் காமே. (91)

(எ-ன்.) குருபத்தி நெறி நின்றார்க்குரிய மேன்மை யுணர்த்திற்று.

*(இ-ள்.)* உயிரை உவமைப் படுத்தியுரைக்குங் காலத்து உயிரையும் அஃதுறும் மலமாயைகளையும் செம்புற்ற களிம்பெனவும் உலகுற்றவிருளெனவும் ஓதுவர். அதனை ஆற்றல் மிகு ஊற்றமெனும் கன்மம் சிவமந்திரம் எனும் மாயை இவற்றால் நீக்கவேண்டும். உமியும் முளையுஞ் செறிந்த அரிசியினை உவமித்தால் அம்மும்மலங்களும் அனாதியான குருபத்தியெனும் உணர்வற்ற மாக்களுக்கே யொழிய பிறர்க்கில்லை என்பதாம்.

இதனான் சைவசித்தாந்த விளக்கங்கட்கும் அப்பாற்பட்ட பேரருள் சக்தி வாய்ந்த குருபத்தி நிலை கூறினார்.

### புணை

கடல்சிவ முயிர் திருப்புக்
கருமல முலவை கன்ம
மடரலை போத மாகயம்
மட்டியைம் பொறியி லுன்னைத்
துடர்வுறு கறங்கு போலச்
சுழற்றுமும் மலங்க ணீக்கித்
தடமலாப் பாத நல்குஞ்
சற்குரு விமல னாமே. (92)

(எ-ன்.) குருவருளே புணை என்றது.

(இ-ள்.) சிவமெனும் கடலுள் உயிரெனும் நாவாய் கொடிய மலங்களெனும் சுராக்களுக்கும், கன்மமெனும் செறிந்த நீங்கா அலைகட்கும், மடமை எனும் ஆழ்கயத்திற்கும், ஐம்பொறிகள் எனும் சூறாவளிக்கும் தப்பி, மும்மலங்களாற் சுழற்சியுறாமல் நிலைகொடுக்கும் பேரருள் சற்குருவின் குற்றமற்ற பாதகமலங்கள் எனும் புணையே யாகும் என்பதாம்.

### மருவா நெறி

சிவனுயிர் பாச மென்றே
செப்பமுப் பொரு ளனாகி
சிவனருள் நிமல னாகுஞ்
சீவனை ஞான போதன்
சிவனையோ ஞானங் கூடாச்
சீவனைக் கூடும் பாசம்
உவருறு முத்தி நிரை
யுத்தியை மருவி டாதே. (93)

(எ-ன்.) முத்தி நிரை உத்தியை மருவிடாதே என்றது.

*(இ-ள்.)* பதி, பசு, பாசம் என்று முப்பொருளையும், சிவனருளையே மலமென்றும் ஓதி, சிவன் ஞானங்கட்கு அப்பாற்பட்டவனென்றும், சீவனைப் பாசம் பத்திக்கும் என்றும் மயக்கமுறுத்தும் முத்தி குறித்த உத்தியினை அணையாதே பத்தி நெறியே ஒழுகுக என்பதாம்.

இதனான் மயக்க நெறியின் சிறப்பின்மை உணர்த்தி அவ்வழியுறேல் என்றார்.

**நின்மலர்**

*சகலரைம் மலத்தோர் நான்கு*
*மலம்பிர ளையரைச் சாரு*
*மிகல்மல மூன்று விஞ்ஞா*
*னகலருக் கேயு மென்று*
*மிகமலந் திரோதை யொன்று*
*முற்றுமுன் னாலவற் காகுஞ்*
*சுகமலி சிவமெய்ஞ் ஞானச்*
*சுத்தர்நின் மலவ ராமே.* **(94)**

(எ-ன்.) நின்மலராவரியல்புணர்த்திற்று.

*(இ-ள்.)* சகலர், ஐம்மலத்தார், பிரளயர் இவர்களை நான்கு மலம் சாரும். முரண்மிகு மூன்று மலங்கள் விஞ்ஞான கலரை அடையும். திரோத மலமென அகமலம் ஆகி முற்குறிப்பிட்டோரைச் சாரும். சுகந்தரும் சிவமெய்ஞ் ஞானத்தினைச் சார்ந்த சுத்தர்களே எத்தகைய மலமுமற்ற நிமலராவர் என்பதாம்.

இதனான் மெய்ஞ்ஞான பத்தரின் நின்மலவான்மை யுணர்த்தப்பட்டதறிக.

**சிவானந்தம்**

*அகனிரு டிரோத மூலம்*
*மலங்களை யகன்றோர் காண்பர்*

*மகிழ சிவானந்த ஞான*
*வயித்துவ நடஞ்செய் பாத*
*மிகலயனி னரி யேறாள்*
*னீசான சாதாக் கியங்கள்*
*பகர்பர விந்து நாதம்*
*பரைபர சிவந்த பாதம்.* *(95)*

(எ-ன்.) மலநீக்கம் பெற்றுச் சிவானந்த முறுவோர் பேறுணர்த்திற்று.

*(இ-ள்.) அகவிருள் பயப்பதாய திரோத மூல மலங்களைந்த மெய்ப்பத்தர்களே சிவானந்த நடஞ்செய் பாதத்துடன், பிரமன், திருமால், சத்தி, ஈசானன் எனும் சாதாக்கியங்களுடன், நாத, விந்து தத்துவ நிலைகளையும் கண்டுணர்ந்து பராபரப் பேரின்பத்துள் திளைப்பர் என்பதாம்.*

**திருநடங் காண்மார்**

*உன்னரிய சுழுமுனையுட் சித்திரமும்*
*வச்சிரமு மொன்று ளொன்றாய்*
*மன்னிடு மானந்த நடம் வச்சிரத்தி*
*லியமமும் மலமுமகன்றோர் காண்பா*
*ரன்னவருட் சித்திரத்தி ஞான*
*நடமலங்கலைக ளகன்றோர் (காண்பர்)*
*நன்னெறியாஞ் சுழுமுனையிற் கலையகன்றோர்*
*வயிந்துவ நடங் கண்டாரே.* *(96)*

(எ-ன்.) அய்ந்துவ நடங்காண்மார் பெருமை விளக்கிற்று.

*(இ-ள்.) கருதற்கரிய சுழுமுனையுள் இடகலையும் பிங்கலையும் ஒன்றிலொன்றாய்க் கலந்து பெருக்கிடும் ஆனந்த நடத்துள் மகிழ்வர். அவருள் இடகலையினுள் ஞான நடக்கலைகளைச் சிலர் பெறுவர். அக்கலைகளும் நீங்கப் பெற்ற சித்த மெய்ப்பத்தியினரே சுழுமுனையுள் இறைவனின் திருநடங்கண்டுய்வர் என்பதாம்.*

சித்திரம், வச்சிரம், ஒன்றுளொன்று, சுழுமுனை, ஆனந்தகூடம் இவையனைத்தும் சித்தரியற் கலைச் சொற்களாம்.

## அத்தன் மேனி

அத்தனுக் குரியமேனி நான்குளவாகு
(மோதிற்)சத்தியா ருயிற் கண்டுந்
தத்துவந்தகமை சாலவைத்த விச்சுவ
மின்னான்கு மதிப்பரு முயிர்
பெத்த முத்தியினை நல்குங் கரு(கட்கெல்லா)
ஏனையின் பெருமை யாமே. (97)

(எ-ன்.) அத்தன் மேனி நான்கும் நல்கும் முத்தி யுணர்த்திற்று.

(இ-ள்.) அத்தனுக்குரிய மேனியாக அமைந்தவை நான்காகும். இதனைக் கூறுங்கால் சத்தி, தத்துவம், தகைமை, விச்வம் என்ற பெயர் முறையமைத்து விளங்கும். இந்நான்கே மதிப்புயர்ந்த உயிர்க்கான ஊதியமாம் பெத்த முத்தியினை நல்குவதாகும். மற்றும் தன் பெருமையுமாகும் என்பதாம்.

இதனான் இறைவன் நான்கு வழியானும் அருளும் சிறப்புணர்த்தினார்.

## மெய்யன்பு

தேடுதல் திகைத்தல் தேறல்
சிந்தித்தல் சென்று கூடல்
வாடுத லுரைத்தல் மோன
மலவுறு பத்தி முற்றும்
வீடுதல் கரண நீத்தல்
விழிமழை பொழித லெல்லாந்
தாடலைப் புரையு மேகந்
தன்மையற் குதன்மை யாகும். (98)

(எ-ன்.) மெய்யன்பின் திறம் உரைத்தது.

*(இ-ள்.)* இறைமையைத் தேடுதல், மலமாயைகளால் திகைத்தல், சீலத்தால் தேறுதல், ஞானத்தால் சிந்தித்தல், யோகத்தால் சென்று கூடுதல், மயக்கத்தால் வாடுதல், அவலத்தால் வாட்டமுரைத்தல் இவையனைத்தும் மோனமல்ல, மெய்ப்பத்தி நெறியெனத் தெளிக. பற்றற்ற விடுதல். அந்தக் காரணங்களை நீக்குதல், கண்ணீர்பொழியும் காதலராதல் இவையாவும் மெய்ப்பத்தியினை மேகமெனப் பொழியுந் தகுதியுடையர்தம் தன்மைகளாகும் என்பதாம்.

**வழுநிலை**

பரசிவ நிலையோர் நிட்டை
தவறிடிற் பறையைச் சார்வர்
திரமிகு பறையோர் நிட்டை
சிதைத்திடிற் குடிலை சேர்வோர்
விரமிகுங் குடிலை நிட்டை
வழுவினார் களாதி தேகம்
விர... ... நுயறாக
... ... யுடலொழியும் போதில். *(99)*

(எ-ன்.) சைவநெறியுள் பிழைத்தாரெய்தும் பழியுணர்த் திற்று.

*(இ-ள்.)* பரசிவ வெள்ளத்தோர் நிட்டையினை தவறி பிழை செய்யின் பறையர் எனும் கீழ்சாதியினை அடைவர். ஆற்றல் மிக்க பறையோர் நிட்டை சிதையுமேயாயின் குடிலராவர். வீரம் மிக்க குடிலர் நிட்டையிற் தவறுவார்க ளெனின் அவர்தம் தேகம் நரக வேதனையுற்று உடலொழியுங் காலத்து (உயிர்த்துயரதிகமாகும்) என்பதாம்.

**ஈசனியல்**

ஒல்லையி லுரக ரெல்லா
மொவ்வொன்றா யெழுத்தை யொற்றிச்

சொல்லுவர் பலவுஞ் சொன்ன
சொல்லெழுத் துணரார் போலப்
பல்லுயி ரென்ற கன்மப்
பயனறிந் தேற்றுக் கொண்டே
யெல்லெயி லருந்து மீச
னியல்பினை யுணர்த்தி டாரே. *(100)*

(எ-ன்.) சொல்லுட் பொருளென்ன உயிர்களுள் விளங்கும் ஈசனாரியல்பு இதுவென்றது.

*(இ-ள்.) கல்விவலார் ஒவ்வொரெழுத்தாக இசைத்துக் கூட்டிச் சொற்களைப் படைப்பர். அவ்வாறு அவர் படைக்கும் சொற்கள் பலவாயினும் அவற்றது பொருளை அறியாரது மடமை போல பல்லுயிர்களாக விளங்கும் இவ்வுலகில் கன்மப்பலனாயிலங்கும் இறைவனது இயல்பினை உணரார் பழிபெறுவரே என்பதாம்.*

**சுற்றம் நீங்கல்**

தன்மனை யருமை காணித்
தந்தைதாய் மைந்தர் சுற்ற
மனைவிதன் னுடல மெல்லாம்
மிதித்துத்தா னும்மை யென்றே
... ... ... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... ... ... ...
தனதெனு முரைசிந் தித்தாய்
தவிர்த்தவ ரருளைச் சார்வர். *(101)*

(எ-ன்.) தன் சுற்றம் விடுத்து இறைமையைச் சார்வர்தம் பெருமை பேசிற்று.

*(இ-ள்.) தன் மனை, மதிப்புயர் வயற்காடு, தன் தாய், தன் தந்தை, தன் புதல்வர், தன் சுற்றம், தன் மனைவி, தன்னுடல் இவற்றையெல்லாம் படிப்படியாகத் தள்ளி யொதுக்கியொழித்து உண்மைப் பொருளை நாடுவார் தனது*

எனும் சிந்தனைகளையும் தவிர்த்து இறைவனதருளைச் சார்வர் என்பதாம்.

### நாதன் புந்தி

வேதமா கமந் தீக்கை
விதிகளுஞ் சரிகை யாதி
மேதகு பாத னான்கு
மிருபத முத்தி னான்குந்
நீதிலா ணவ மகற்றுஞ்
செப்பிய தனைத்து முந்தற்
போதநீ றாக னாதன்
புந்திசெய் தமைத்த தாமே. (102)

(எ-ன்.) வேத வேதாந்தங்கட்குமரியது நாதன் புந்தியென்றது.

(இ-ள்.) வேதம், ஆகமங்கள், தீக்கை விதிகள், சரியைகள், ஆதிபாதங்கள் நான்கு, இருபதங்களடையும் முத்திப்பேறு நான்கு, ஆணவம் இவற்றை அகற்றி, நீறாக்கும் அருமை வாய்ந்தது இறைமையின் புந்தியாகும் என்பதாம்.

இதனான் மேற்கருவிகளினும் இறைவனின் சிந்தனை யொன்றே மேன்மை மிக்கதென்றார்.

### சிவாயம்

அவ்வினி லுயிரீ ரெட்டு
முதித்திடு மதிலோ கார
முவ்வினிற் சுவாதி யைந்துள்
வதில் நன்மை வுண்டாகு
மவ்வுத விய்ய வாதி
யொருபதிற் சிவாய மூன்று
மொவ்வரு மறைவித் தார்க்கு
மொன் சிவாய மென்றே. (103)

(எ-ன்.) மூலமந்திரப் பொருளுணர்த்திற்று.

*(இ-ள்.)* "அ" கரத்தில் உயிர்கள் ஒடுங்கும் மீண்டும் தோன்றிடும். அதில் ஓகாரமமையும், 'உ' கரத்தில் சுவாதி ஐந்துமமையும், 'வ' கரத்தில் நன்மை உண்டாகும். 'ம' கரத்தில் விய்யவவாது உருப்பெறும். ஆயின் 'சிவாய' வென்ற மூன்றெழுத்து மந்திரமோ இவ்வகிலத்தில் மூலப்பொருளை ஒருங்கே விளக்கிடும் ஆற்றல் மிக்கதென்பதாம்.

இதனான் 'சிவாய' மந்திரமே முழுமுதலாகும் என்றார்.

'தோற்றிய திதியே ஒடுங்கி' என்பதும் இம்மந்திர வழி விளக்கப்பட்டது.

### ஆகமங்கண்ட மந்திரம்

முன்னெழுத் தீரெட்டு ... ... ....
மருதிக் கலைய தாகுமுகார
முள்ளெழுத் தீராறு மொளிரு
நன்கலை யதாகு முகார
முள்ளாலு நீக்கி யிசைத்திடு
மெழுத் தோ ரெட்டும்
பகர்தழற் கலைய தாகப்
பகருமா கமங்க டானே. *(104)*

(எ.ன்.) ஆகமங்கள் உரைக்கும் அருமந்திரங்களை விளக்குகிறது.

*(இ-ள்.)* 'சிவாய' எனும் மூலமந்திரத்தின் முதலா மெழுத்தாய 'சி'' காரம் பதினாறும் கலைகளுக்குடைய தாகும். வகாரமும் ஒளிறும் நற்கலைகளாகப் பதினாறு கொண்டது. யகாரம் முன்னதாக அமைந்த நான்கும் நீங்கிய நிலை எஞ்சிய எட்டெழுத்தினையே மந்திரச் சொல்லாக ஆகமங்கள் உணர்த்துகின்றன என்றார்.

இதனான் ஆகமங்களுநரைத்த மந்திரத்தினும் மேன்மை யான சிவாமுணர்த்தினார்.

## சிவ பாவனை

தத்துவஞ் சிவபதத் திற்
றகையது நீயா னாயென
வரத்தரு மறைகள் நான்கு
முரைத்திடு மதனா லெங்கும்
நித்தனவ் வுயிரே போல
நீங்கிடா நிறைவி னாலே
பத்தினி லினிய சோகம்
பாவிக்கப் படுவ தாமே. *(105)*

(எ-ன்.) உயிர்போல அந்தனார் அமைவர் என்பதாம்.

*(இ-ள்.)* சிவபதத்திற் தக்கது தத்துவமே. "அதனுள் நீயும் ஒன்றுவாய்" என வரந்தரும் நான்மறைகள் உரைத்திடும். ஆதலின் இறைவன் அவ்வுயிர்களாய், தானாய், தானு மவையுமாய் நீங்காமல் நிற்பன். ஆதலின் பத்தாம் நிலை தத்துவத்துள் சிவோகம் பாவனை பாவிக்கலாகும் என்பதாம்.

## சத்தி நிபாதம்

ஆரணம் நெல்லோ டொக்கு
மாகம மரிசி போலா
மாரண முலகற் காகுஞ்
சத்தினி பாதற்காகுஞ் சைவம்
யார்குறி னைகள் நெல்லோ
பருகிடு மரிசி தன்னைச்
சீருய ரினைகள் கொள்ளு
மாறுபோற் றேறி டீரே. *(106)*

(எ-ன்.) இறைவனின் எளிவருதலால் சத்தி நிபாதம் உணர்த்திற்று.

*(இ-ள்.)* வேதங்கள் உமியும், சுனையும், முளையும் அரிசியும் கொண்ட நெல் போன்றது. ஆகமங்கள் நல்ல அரிசி

போல்வது. ஆரணங்கள் உலகாயதர்களுக்கானது. சத்தி நிபாதமோடு திகழும் சீலர்கட்குரியது சைவம். அரிசியினின்றும் குறுநெரிய் களைந்து தனித்த அரிசியைப் பாகிட்டு சிறப்புணவாகக்கொள்ளுமாறு ஆரணங்களைந்து குரு மெய்ப்பத்தி நெறி கொண்டொழுகுக என்பதாம்.

**பிரணவ பிராணாயாமம்**

இரேசகந் தற்போக் காகு
மிலங்கரு ளிதயந் தானே
யாசில்பூ ரகம தாகு
மருஞ்சிவத் திடைய றாத
நேசமோ டிரண்டில் லாத
நிட்டைகும் பகம தாகும்
பேசுமூ வெழுத்து மொன்றாம்
பிரணவம் பிராணா யாமம். *(107)*

(எ-ன்.) சைவப் பிரணவ, பிராணயாமம் ஆமாறுணர்த் திற்று.

*(இ-ள்.)* இரேசகந் தற்போக்காக அமைவது விளங்கும். அருள் இதயமாகும். குற்றமற்ற மணிபூரத்தில் விளங்கும் சிவத்தினை இடையற[illegible]டாத அன்பு செலுத்தி வணங்குதலே நிட்டையும் கும்பகமுமாகும். பேசுகின்ற சிவய என்ற மந்திரமே மூலமந்திரமே பிரணவ மந்திரமாகும். சிவனருள் பெறுவோர் இயற்றும் பிரணவ பிராணாயாமங் களிவையே என்பதாம்.

இதனான் சிவன் எனும் ஒரு பொருளே முழுமையான தென்பதும், அது குறித்த ஒரு வழிப்பட்ட பேச்சும் சிந்தனையும் தான் பிரணவ, பிராணயாமமாகும என்பதுணர்த்தினார்.

**ஒளி**

நீடும்பே ரொளியே யானு
நீரொளி மாகுஞ் சோம

நாடுந்தீச் சுடரிடம் மூன்றும்
நண்ணியயெவ் வுயிற்குங் கண்ணாய்
மூடுந்தீ வினை யருத்தும்
முச்சுட ருதிக் தொடுங்க
வாடுங்கால் நிறம தாகும்
அகிலமுங் கறுத்த தன்றே. *(108)*

(எ-ன்.) ஞான ஒளி இத்தன்மைத் தென்றது.

(இ-ள்.) நீடிய பேரொளி, நீரொளி இவை தீச்சுடரின் ஒளியுடனாக மூன்றாகி உலகின் உயிர்கட்குக் கண்ணின் ஒளியாய் விளங்கி பொருட்களை விளக்கும். அதுபோல் ஞானசூரியனாம் சிவனும் மெய்ப்பத்தியுற்றார்க்கு மெய்மைப் பொருளை காட்டுவன் என்பதாம்.

*பேரொளி - சூரியன்.*

*நீரொளி - குளிர்ந்த நிலவொளி.*

காணுங்கண்ணிற்குக் காட்டும் ஒளிபோல காணவுள்ளத்தைக் கண்டு காட்டலின் அயரா அன்பின் அரன் கழல் செலுமே என்ற சிவஞான போதக் கருத்து ஈண்டு ஒப்பு நோக்கற்பாலது.

**மனத்தீர்த்தம்**

இடையெனு நாடி கங்கை
பிங்கலை யமுனை யாகுந்
திடமிகு சுழலை நாடி
திகழ்சரசுவதி யாகும்
நடுநிலை யுளத்தோ ளிந்த
தந்தி குடைந் தாடிடாத
மடவார்கள் மேடு பள்ளத்
திரிந்துடல் வருந்து வாரே. *(109)*

(எ-ன்.) மூன்று நாடிகளே தீர்த்தம் என்றது.

(இ-ள்.) சுழுமுனை எனப்படும் நடு நாடியே கங்கையாகும். பிங்கலை எனப்படும் வலப்புற நாடியே யமுனையாகும். ஆற்றல்மிக்க சுழல்களைக் கொண்ட இடகலை எனப்படும், இடப்புற நாடியே சரசுவதி நதியாகும். நடுநிலையுளம் படைத்த மெய்ப்பத்தியாளர் இம்மூன்று நதிகளின் சங்கமத்தில் மூழ்கி மகிழ்வர். இந்நிலையறியாத மடவார்கள் கங்கை, யமுனை,சரஸ்வதி நதிகளைத் தேடி, மேடு பள்ளந் திரிந்து உடல் வருத்தம் அடைகின்றனர் என்பதாம்.

கோயிலும், குளங்களும் தன்னகத்துள்ளேயே உள்ளன என்ற சிவவாக்கியச் சிந்தனைகள் ஒப்பிடத்தக்கன.

**அருள்பெறுக!**

பூத சாரஞ் சுவர்க்கத்தில்
போக நுகரு மவர்க்குடலாம்
பூத மகலா வெழுநரகம்
புகுபா தகருக் குடலாகும்
பூத பரிணா மத்தாலாம்
புவியுள் ளோர்கட் குடலாகு
மோது மிவைமூன் றையையு(மே)
மொருவா ரருளைப் பெறுவாரே. *(110)*

(எ-ன்.) உடலம் நீக்கி அருள் பெறுமாறு புலப்படுத்துகிறது.

(இ-ள்.) சுவர்க்கத்தில் சுகபோகங்களை நுகர்வோர்க்குப் பூத சாரந்தான் உடலமாகும். ஏழு நரகத்திலும் துன்பம் துய்ப்போருக்குப் பூதம் அகலா உடலமையும். புவிதனிலுள்ள மானிடர்க்கு பூத பரிணாமத்தாலாகும் உடலமையும். இவை மூன்றையும் நீக்கி மலத்தை இன்ப துன்ப நல்வினை, தீவினைகட்கு அப்பாற்பட்டு ஒருமை நிலையில் கொள்வாரே சிவனருளைப் பெறுவராவர் என்பதாம்.

**(நிறைவு)**